# இன்னமுதம்

(தோத்திரப்பாடல்கள் - உரைக்குறிப்புகள்
மற்றும் சுரக் குறிப்புகளுடன்)

உரைக்குறிப்புகள்:
பேராசிரியர் அ.ச. ஞானசம்பந்தன்

சுரக் குறிப்புகள்:
எஸ். இராமநாதன்

படங்கள்:
கோபுலு



கங்கை புத்தகநிலையம்

23, தீனதயாளு தெரு,
தியாகராய நகர், சென்னை – 600 017.

கங்கை முதற் பதிப்பு : ஜூலை, 2005


விலை ரூ. 30.00

| | | |
|---|---|---|
| Title | : | **INNAMUDHAM** |
| Commentator | : | Prof. A.S. Gnanasambandan |
| Edition | : | Gangai First Edition, July 2005 |
| Pages | : | 96 |
| Published By | : | **GANGAI PUTHAKA NILAYAM,**<br>23, Deenadayalu Street,<br>Thyagaraya Nagar, Chennai - 600 0 |
| Price | : | Rs. **30.00** |

Laser Typeset by: Sivaa Graphics, Ph: 23610810

Printed at: Malar Printers 044-8224803

# அணிந்துரை

**“ப**ல்விதமாயின சாத்திரத்தின் மணம் பாரெங்கும் வீசும் தமிழ்நாடு” என்று மகாகவி பாரதியார் பாடினார். நாயன்மார்களும் ஆழ்வார்களும் தோன்றி, சிறந்த முறையில் பக்தியைப் பரப்பிய தமிழ்நாட்டில், இன்று, பக்தி கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து கொண்டே வருகின்றது. மிக்க இளம் பருவத்திலேயே குழந்தை களுக்குக் கடவுள் பக்தியை ஊட்டினாலொழிய வயது சென்ற பிறகு கிடைப்பது கஷ்டம்.

கடவுளை அடைவதற்குப் பல்வேறு வழிகளைக் கண்டிருந்தாலும், அவற்றுள் எல்லாம் மிக **எளிமையானது பக்திமார்க்கம்** என்று இந்நாட்டவர் கள் கண்டார்கள். ஆடி, பாடி, பக்தி செய்வது என்பது குழந்தைகள், பெரியவர்கள், பெண்கள், முதியவர்கள், இளையவர்கள் ஆகிய அனைவருக்கும் எளியதாகக் கைகூடக் கூடிய ஒரு சிறந்த வழியாகும்.

அறிவுத் துறையில் முன்னேறிச் சென்று, ஒப்பற்ற ஞானத்தை உலகுக்கு உபதேசித்த **ஆதிசங்கரர்** கூடப் பக்தி மார்க்கத்தின் சிறப்பை எடுத்துக்கூறி **‘சௌந்தர்ய லஹரி!’ ‘சிவானந்த லஹரி’** போன்ற பாடல்களை அருளிச் செய்தார். ஆகவே பக்தி மார்க்கத்தின் சிறப்பைப் பற்றி அதிகம் சொல்லத் தேவையில்லை. இளம், குழந்தைகள், இசையோடு கூடிய பாட்டுக்களில் தம்மை மறந்து ஈடுபடுவது சர்வ சாதாரணம். பயன்

இல்லாததும், தீமை பயப்பதுமாகிய பாடல்களைக் கேட்டு, பாடி, வீண் பொழுது கழிப்பதைவிட இவை போன்ற சிறந்த பக்திப் பாடல்களைப் படிப்பதாலும் பாடுவதாலும் மனநிறைவும் மகிழ்ச்சியும் ஏற்படுவதோடுகூடச் சிறந்த பயனும் ஏற்படுகின்றது.

ஒரு நாடு முன்னேற வேண்டுமேயானால், அதிலுள்ள இளம் குழந்தைகள், நல்ல பண்பாட்டில் பயிற்றுவிக்கப் படுவதுதான், சிறந்த வழியாகும். அந்த முறையில் குழந்தைகளுக்குப் பயன்படத்தக்க இப்பாடல்களை ஒலிப்பதிவு செய்து இசைத்தட்டுகளாக வெளியிடும் நல்ல பணியை மனமுவந்து செய்ய முன்வந்த **"சரஸ்வதி இசைத்தட்டு நிறுவனத்தார்"**, அதன் அதிபர் **திரு.ஏவி.மெய்யப்பன்** அவர்களையும் பாராட்டுகிறேன். பாடல்களின் பொருளை விளங்கிக் கொள்வதுடன் இசையமைப்பையும் கற்றுக்கொள்ளும் முறையில் பாடல்களைத் தரப்படுத்தி உரையுடன் வெளியிட்டனர். திருக்கோயில்களிலும் பள்ளிக்கூடங் களிலும் இவ்விசைத்தட்டுகளை மிகுதியும் பயன் படுத்திப் பயனை அடைய வேண்டுமென்பதே என்னுடைய பேரவா ஆகும்.

எம். பக்தவத்ஸலம்
முன்னாள் முதல்வர்



# முன்னுரை

"**தோ**ன்று நிகழ்ந்தது அனைத்தும் உணர்ந்திடும் சூழ் கலைவாணர்களும், இவள் என்று பிறந்தவள் என்று உணராத இயல்பினை" உடையவளாகிய தமிழ்த்தாய் இலக்கிய வளம் மிகுந்து விளங்குகிறாள். நவரசம் ததும்பும் காவியங்களும், மக்களை நல்வழிப்படுத்தும் நீதி நூல்களும் தமிழில் நிறைய உண்டு. இவை மட்டும் இன்றி பக்தி மார்க்கத்துக்கு அடிப்படையான தோத்திரப்பாடல்களும் தமிழன்னைக்கு அணிகலன்களாக விளங்குகின்றன. இப்பாடல்கள் தமிழினத்தின் சமய நெறிகளை அழகாகப் பிரதிபலிப்பனவாகும்.

சமயம் என்பது தமிழ் மக்களின் ரத்தத்தில் ஊறிய ஒன்று. மொழி, மதம், இறையருள் என்னும் மூன்றும்– தமிழ் மக்களைப் பொறுத்த மட்டில்– ஒன்றுடன் ஒன்று இரண்டறக் கலந்தவை; பிரிக்கவே முடியாதவை. தமிழ் மொழிப் பற்று என்பது சமயப் பற்றாகவும், சமயப் பற்று என்பது பாரதமென்னும் தேசியப் பற்றாகவும் மலரக்கூடியதாகும். ஏனெனில் "தென்னாடுடைய சிவன்" எழுந்தருளியிருப்பது வடக்கே உள்ள கயிலாய மலையிலாகும். ஆகவே தமிழர்களின் சமயமும், பக்தி மார்க்கமும் பாரத நாட்டின் பண்பாட்டில் ஒரு சிறப்பு மிக்க அங்கமாகும்.

இச்சிறப்பு உண்டாவதற்குக் காரணமாக இருந்தவர்கள் நமது முன்னோர்களாகிய நாயன்மார்களும், ஆழ்வார்களுமே. பக்தியில் மூழ்கித் திளைத்த அவர்கள், காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கிப் பல்லாயிரக் கணக்கான பாடல்களைப் பாடினர். இவர்களுக்கெல்லாம் முன்னோடியாக, முன்னணியில் விளங்கியவர் திருஞானசம்பந்தப் பெருமான். ஏழாம் நூற்றாண்டைச் சேர்ந்த இச்சிறிய பெருந்தகையாரை அடியொற்றி வந்த ஏனைய நாயன்மார்கள், பனிரெண்டாம் நூற்றாண்டுவரை பாமாலைகளாகப் பாடி இறைவனுக்கு அணிவித்தார்கள். அப்பாடல்கள் பன்னிரு திருமுறைகளாக வகுக்கப் பெற்றுள்ளன.

**திருஞானசம்பந்தர்** பாடல்களை முதல் மூன்று திருமுறைகளாகவும் **திருநாவுக்கரசர்** பாடல்களை அடுத்த மூன்று (4,5,6) திருமுறைகளாகவும், **சுந்தரர்** தேவாரத்தை ஏழாவது திருமுறையாகவும், **மாணிக்க வாசகப் பெருமான்** "திருவாசகத்தை" (திருக்கோவையார் உள்பட) எட்டாவது திருமுறையாகவும், 'சேந்தனார்' முதலியவர்கள் அருளிச் செய்த 'திருவிசைப்பா திருப்பல்லாண்டு' இரண்டையும் ஒன்பதாவது திருமுறையாகவும் **திருமூலர்** அருளிச் செய்த 'திருமந்திரம்' என்னும் நூலைப் பத்தாம் திருமுறையாகவும், **சேரமான் பெருமான் நாயனார், காரைக்கால் அம்மையார்** முதலானவர்கள் அருளிச் செய்த பாடல்களைப் பதினொன்றாம் திருமுறையாகவும், **சேக்கிழார்** அருளிச் செய்த பெரியபுராணத்தைப் பனிரெண்டாம் திருமுறையாகவும் வகுத்துள்ளார்கள்.

பொன்போன்ற பழமையைப் போற்றிப் பாதுகாக்கும் புத்துணர்வு இன்று தமிழ் மக்களிடம் வளர்ந்து வருகிறது. அந்த உணர்வின் அடிப்படையில் இந்தப் பக்திப் பாடல்களையும், பண்முறைகளையும் நாம் பாதுகாக்க வேண்டியவர்களாவோம். நமக்காக மட்டுமின்றி, குறிப்பாக வருங்காலச் சந்ததியை நினைவில் வைத்து நாம் இதைச் செய்ய வேண்டும். நமது குழந்தைகள் தெய்வ பக்தி உள்ளவர்களாக வளரவேண்டும். அவ்வாறு வளர்ப்பது நமது கடமை. அந்த எண்ணத்தைச் செயலாக்கும் பொருட்டு, பன்னிரு திருமுறைகளி லிருந்து சில பாடல்களைத் தேர்ந்தெடுத்து, அவற்றை, ஓதுவார்கள் என்று சொல்லப்படும் இசைவாணர் களைக் கொண்டே பாட வைத்து இசைத்தட்டுகளாகத் தயாரிக்கும் பணியில் பெரியோர்கள் பலர் ஈடுபட்டனர்.

தமிழ்ப் **பேரறிஞர் திரு.அ.ச.ஞானசம்பந்தன்** பாடல்களைத் தேர்ந்தெடுத்து, ஒலிப்பதிவு செய்ய உதவியதுடன் குழந்தைகளை மனத்தில் கொண்டு எளிய முறையில் இப்பாடல்களுக்கு உரை எழுதித் தந்துள்ளார். மேலும் **திரு.எஸ். இராமநாதன்** பாடல்களின் இசை அமைப்பை சுரப்படுத்தி உதவியுள்ளார். (இந்நூலின் ஈற்றில் அது சேர்க்கப்பெற்றுள்ளது.) **தருமபுரம் திரு.பி.சுவாமிநாதன், சீர்காழி திரு. எஸ். திருஞான சம்பந்தன், திருக்களர் திரு.டி.சுந்தரேச தேசிகர்** ஆகியோர் பக்தி மணம் கமழப் பாடல்களைப் பாடியுள்ளனர். இவ்வாறு இப்பயனையும், மக்கள்- குறிப்பாகக் குழந்தைகள்- அடைய வேண்டுமென்ற நோக்கத்துடன், பாடல்களுக்கான பொருளையும் பிற

குறிப்புகளையும் புத்தக வடிவில் வெளியிட்டுள்ளோம். இந்நூல், கருத்துக்கு மட்டுமின்றி, ஓவியர் **கோபுலு** அவர்களின் கைவண்ணத்தால் கண்களுக்கு விருந் தாகவும் அமைந்துள்ளது.

பக்தி மார்க்கத்தைப் பரப்புவதற்கான நன் முயற்சியில் ஒரு சிறு அங்கமாக **"இன்னமுதம்"** என்ற இந்நூலைத் தமிழ் மக்கள் ஏற்றுக் கொள்வார்களாக.

பதிப்பாளர்



# பொருளடக்கம்



# திருஞான சம்பந்தர் தேவாரம்

ஏழாம் நூற்றாண்டில் சீர்காழி என்ற பதியில் சிவபாத இருதயர்க்கும் பகவதியாருக்கும் மகவாய் அவதரித்த பெரியாரே ஞானசம்பந்தர் ஆவார். தமது மூன்றாவது ஆண்டிலேயே இறைவியால் ஞானப்பால் ஊட்டப்பெற்று. எல்லா ஞானங்களும் கைவரப்பெற்று இறைவனைப் பாடத் தொடங்கியவர் இவர். திருஞானசம்பந்தர் பாடிய தேவாரப் பதிகங்களை முதல் மூன்று திருமுறைகளாக வகுத்துள்ளார்கள்.

தந்தையாராகிய சிவபாத இருதயர் ஒரு நாள் குளிக்கச் செல்லும்போது மகனாகிய ஞானசம்பந்தரையும் உடன் அழைத்துச் சென்றார். அவர் இறைவியினுடைய திருவருளால் பாலூட்டப் பெற்று, பால் கடை வாயில் வழியக் கரையில் நின்றார். இதனைக் கண்ட தந்தையார், "யார் உனக்கு இந்தப் பாலைக் கொடுத்தார்கள்" என்று அதட்ட, இவர்தான் என்று தோணி புரத்தில் (சீர்காழியில்) உள்ள இறைவனை விரலினாலே சுட்டிக்காட்டி இப்பாடலைப் பாடுகின்றார். (சீர்காழி தஞ்சை மாவட்டத்தில் சிதம்பரத்தை அடுத்துள்ள ஊராகும். புகைவண்டி நிலையம் உள்ளது)

தோடுடையசெவி யன்விடையேறியோர்
தூவெண்மதிசூடி
காடுடையசுட லைப்பொடிபூசிஎன்
உள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமல ரான்முனைநாட்பணிந்து
ஏத்தஅருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய
பெம்மானிவனன்றே.

*"தோடு அணிந்த காதுகளை உடையவன்; விடை என்று சொல்லப்படும் காளை மாட்டின் மேல் ஏறி, தூய்மையான வெள்ளிய பிறைச் சந்திரனைத் தலையிலே சூடி, சுடுகாட்டில் உள்ள சாம்பலைப் பூசி, என்னுடைய மனத்தைக் கவர்கின்றவன் (யார் என்றால்) இதழ்களையுடைய தாமரைப் பூவில் தோன்றிய நான்முகனாகிய பிரமன் தன்னைப் பணிந்து ஏத்தலினாலே அவனுக்கு அருள் செய்த பெருமை பொருந்திய திருப்பிரமபுரம் என்று சொல்லப்பெறும் சீர்காழியில் தங்கியுள்ள பெருமானாகிய இவனேயாகும்"*

*(விடை ஏறி-ரிஷப வாகனத்தில் அமர்ந்து; காடுடைய சுடலைப் பொடி- சுடுகாட்டில் உள்ள திருநீறு; ஏடு உடைய மலரான்- இதழ்கள் பொருந்திய தாமரையில் தோன்றிய நான்முகன்; முனைநாள்- முன்பொரு நாள்)*





# சீர்காழி

சிறையாரு மடக்கிளியே
    இங்கேவா தேனோடுபால்
முறையாலே உணத் தருவன்
    மொய்பவளத் தொடுதரளம்
துறையாரும் கடல்தோணி
    புரத்தீசன் துளங்கும்இளம்
பிறையாளன் திருநாமம்
    எனக்கொருகால் பேசாயே.

"அழகிய சிறகுகள் பொருந்திய இளங்கிளியே! வா; தேனையும் பாலையும் உண்ணுகின்ற முறைப்படி உனக்குத் தருகின்றேன்; நெருங்கிய பவளத்தோடு முத்தையும் பெற்றுள்ள துறைகளுடன் கூடிய கடலில் மிதக்கும் தோணிபுரத்து உறைபவனும், விளங்குகின்ற இளம் பிறைச் சந்திரனைச் சூடியவனும் ஆகிய இறைவனின் திருநாமத்தை எனக்கு ஒரு முறை சொல்லுவாயாக!"

(சிறை ஆரும்-சிறகுகள் பொருந்திய; மடக்கிளி- இளமை பொருந்திய கிளி; தரளம்- முத்து. தோணிபுரம்- ஊழிக் காலத்தில் உலக முழுவதும் நீருள் அமிழ்ந்துவிட, சீர்காழி மட்டும் மிதந்தது என்ற வரலாற்றால் அவ்வூருக்குத் தோணிபுரம் என்று பெயர் வந்தது.





# குற்றாலம்

திருநெல்வேலி மாவட்டத்திலுள்ள செங்கோட்டை இரயில் நிலையத்தை அடுத்துள்ள திருக்குற்றால மலைக்குச் சென்ற ஞானசம்பந்தப் பிள்ளையார் அம்மலையின் இயற்கைக் காட்சியைக் கண்டு பாடுகின்றார்.

வம்பார்குன்றம் நீடுயர்சாரல் வளர்வேங்கைக்
கொம்பார்சோலைக் கோலவண்டியாழ்செய் குற்றாலம்

அம்பால்நெய்யோ டாடலமர்ந்தான் அலர்கொன்றை
நம்பான்மேய நன்னகர்போலும் நமரங்காள்.

*"மணம் நிறைந்த மலையினையும், நீண்டு உயர்ந்துள்ள சாரலையும், வளர்ந்துள்ள வேங்கை மரங்களையும், அடர்ந்த சோலைகளினிடத்து அழகிய வண்டுகள் யாழ்போல் இசைக்கும் சிறப்பையும் உடையது குற்றால மலையேயாகும்- அழகிய பால், நெய் முதலியவற்றால் அபிஷேகம் கொண்டருளுகின்ற இறைவன் கொன்றை மலர் அணிந்து தங்கியுள்ள இடம்."*

*(வம்பு ஆர் குன்றம்- மணம் நிறைந்த மலை; சாரல்- பக்க மலை; கோல வண்டு- அழகிய வண்டு; அம் பால் நெய்யோடு- பால் நெய்யோடு நீரையும் ஆடலை விரும்பியவன்; நமரங்காள்- நம்மவர்களே.)*

# திருவையாறு



தஞ்சையை அடுத்துள்ள திருவையாற்றுக்குச் சென்ற ஞானசம்பந்தப் பிள்ளையார் அங்குள்ள இயற்கைக் காட்சியைக் கண்டு அருளிய பாடலாகும் இது.

புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
அறிவழிந்திட் டைம்மேலுந்தி
அலமந்த போதாக அஞ்சேலென்று
அருள்செய்வான் அமருங்கோயில்
வலம்வந்த மடவார்கள் நடமாட
முழுவதிர மழையென்றஞ்சிச்
சிலமந்தி அலமந்து மரமேறி
முகில்பார்க்குந் திருவையாறே

*“சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்று சொல்லப்படும் ஐந்து புலன்களும் கலங்கிப் போய்த் தம்முடைய பொறிகளை விட்டுவிட்டு வழிமாறி, அறிவும் அழிந்து, கபம் கட்டிக்கொண்டு அறிவு கலங்கி மயங்கிய காலத்தில் “அஞ்சாதே” என்று அருள் செய்கின்ற இறைவன் தங்கியுள்ள கோயில் (எதுவெனில்) கோயிலை வலம் வருகின்ற இளம் பெண்கள் நடனம் செய்ய, அதற்குப் பக்க வாத்தியமாக மத்தளங்கள் ஒலிக்க, அதைக் கேட்டு இடி ஓசை என்று பயந்து சில மந்திக்குரங்குகள் மரத்தில் ஏறிக் கருமேகம் சூழ்ந்துள்ளதோ என்று அண்ணாந்து பார்க்கின்ற திருவையாறே யாகும்.”*

*(ஐந்து புலன்கள்–சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்; பொறி- மெய், வாய், கண், மூக்கு, செவி; ஐ மேல் உந்தி- கபம்(சளி) மேலிட்டு; அலமந்தபோது- என் செய்வோம் என கலங்கிய போது; முழவு- மத்தளம்)*

# சீர்காழி

சேவுயரும் திண்கொடியான் திருவடியே
சரணென்று சிறந்த அன்பால்
நாவியலும் மங்கையொடு நான்முகன்தான்
வழிபட்ட நலம்கொள் கோயில்
வாவிதொறும் வண்கமலம் முகங்காட்டச்
செங்குமுதம் வாய்கள் காட்டக்
காவியிருங் கருங்குவளை கருநெய்தல்
கண் காட்டும் கழுமலமே.

*“விடைக் கொடியை உயர்த்திய சிவபெருமானின் திருவடியே சரண் என்று நினைத்து மிகுந்த அன்போடு, நாவில் வாழும் கலைமகளோடு நான்முகன் வழிபாடு செய்த நன்மை மிக்க கோயில் (எதுவெனில்) குளங்களில் உள்ள வளப்பம் பொருந்திய தாமரைகள் முகங்களையும், செவ்வல்லிகள் வாய்களையும், குவளை, நெய்தல் ஆகிய மலர்கள் கண்களையும் நினைவூட்டும் முறையில் மலரும் கழுமலமே ஆகும்.”*

*(சே-இடபம்; நா இயலும் மங்கை-கலைமகள்; வாவி-குளங்கள்; வண்கமலம்- வளப்பம் பொருந்திய தாமரை; செங்குமுதம்- செவ்வல்லி) கழுமலம்- தன்னை வணங்கியவர்களின் வினையை (மலத்தை)ப் போக்கும் ஊர் ஆதலால் இப்பெயர் பெற்றது.*



# பொது

**கொ**டிமாடச் செங்குன்றூர் என்ற பழம் பெயரையுடைய திருச்செங்கோட்டிற்குப் பெருமான் எழுந்தருளிய பொழுது அடியார்கட்குச் சுர நோய் கண்டிருந்தது. "இது பழவினையின் பயன்'' என்று சமாதானம் கூறிக்கொண்டு அவர்கள் தம் துயரத்தைப் பொறுத்துக் கொண்டிருந்தனர். இதை அறிந்த திருஞானசம்பந்தர் அவ்வாறு பழவினைப் பயன் என்று கூறிவிட்டால் "இறைவன் கருணையை எவ்வாறு அறிவது?" என்று கூறி "அவனை அன்புடன் வேண்டுவதன்மூலம் பிராரத்துவ வினையையும் அழிக்கலாம்'' என்ற கருத்தில் இப்பாடலைக் கூறுகிறார்.

அவ்வினைக் கிவ்வினை யாமென்று
சொல்லும் அஃதறிவீர்
உய்வினை நாடா திருப்பதும்
உம்தமக் கூனமன்றே

கைவினை செய்தெம் பிரான்கழல்
போற்றுதும் நாமடியோம்
செய்வினை வந்தெமைத்
தீண்டப்பெறா; **திருநீலகண்டம்**

*"நாம் முன் பிறவிகளில் செய்த அந்த வினைகட்கு ஈடாக இப்பிறவியில் இந்தத் துன்பங்களை அனுபவிக்கின்றோம் என்ற கருத்தை அறிந்து பேசும் அடியார்களே! (இதனைக்கொண்டு) இத் துன்பத்தைப் போக்கும் வழியை நாடாது இருப்பதும் உமக்கு இழுக்கு அல்லவா? கைத் தொண்டு செய்து நாம் இறைவன் திருவடிகளைப் போற்றுவோம். (அப்படிப் போற்றினால்) நாம் செய்த வினை (பிராரத்துவ வினை) வந்து நம்மை ஒன்றும் செய்யாது. திருநீலகண்டத்தின் மேல் ஆணை."*

*(அவ்வினை-முன் பிறவிகளில் செய்த வினை; (பிராரத்வம் என்று இதனைக் கூறுவர்) இவ்வினை-இப்பொழுது அனுபவிக்கும் சுர நோய்; உய்வினை-தீரும் உபாயம்; கைவினை-கைகளால் செய்யப்படும் கடவுள் தொண்டு)*

*பொது- குறிப்பிட்ட ஒரு தலத்தைப் பற்றிப் பாடாமல், பொதுவாகப் பாடியது.*

# திருவலஞ்சுழி

*இப்பதிகம் கும்பகோணத்தை அடுத்துள்ள திருவலஞ்சுழி என்ற ஊரின்கண் பிள்ளையார் பாடியதாகும்.*

என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே
 இருங்கடல் வையத்து
முன்னைநீபுரி நல்வினைப் பயனிடை
 முழுமணித் தரளங்கள்
மன்னு காவிரி சூழ்திரு வலஞ்சுழி
 வாணனை வாயாரப்
பன்னி ஆதரித் தேத்தியும்
 பாடியும் வழிபடு மதனாலே

*"நெஞ்சே! என்ன புண்ணியம் செய்தாயோ! பெரிய கடலால் சூழப்பட்ட இப்பூவுலகின்கண், முன்னர் நீ செய்த நல்வினையின் பயனாக, நவமணிகளையும் முத்துக்களையும் தன்னிடத்தே பெற்றுள்ளதும், என்றும் நிலை பெற்றுள்ளதும் ஆன காவிரி நதியால் சூழப்பட்டுள்ள திருவலஞ்சுழி என்னும் ஊரின்கண் உள்ள இறைவனை, வாயாரப் பாடி, மனத்தால் ஆதரித்து, அவன் புகழை ஏத்திப் பாடி வழிபாடு செய்கின்ற காரணத்தால் (என்ன புண்ணியம் செய்தாயோ)"*

*(இருங் கடல்- பெரிய கடல்; வையம்- இவ்வுலகம்; முழு மணி-நவ மணிகள்; தரளங்கள்- முத்து; மன்னு- என்றும் நிலைபெற்றுள்ள; வாயாரப் பன்னி- பலமுறையும் வாயாரப் பாடி)*



# திருக்கேதாரம்

தொண்டரஞ்சு களிறும் மடக்கிச் சுரும்பார்மலர்
இண்டைகட்டி வழிபாடு செய்யும் இடமென்பரால்
வண்டுபாட மயிலால மான்கன்று துள்ளவரிக்
கெண்டைபாயச் சுனைநீல மொட்டலரும் கேதாரமே.

*"அடியார்கள், ஐந்துபுலன்களாகிய ஆண்யானை களையும் அடக்கி, வண்டு மெய்க்கின்ற மலர்களால் பல்வேறு வகையான மலர் மாலைகளைக் கட்டி, இறைவனை வழிபாடு செய்கின்ற இடம் என்று சொல்லுவார்கள். (எதனை எனில்) வண்டுகள் பாட, மயில்கள் ஆட, மான் கன்றுகள் துள்ளி ஓட, வரிகளையுடைய கெண்டை மீன்கள் துள்ளிப் பாய்கின்ற சுனையிடத்து நீலோற்பல மலர்கள் மொட்டு விரிக்கின்ற கேதாரத்தையே ஆகும்."*

*(தொண்டர்- அடியார்கள்; ஐந்து களிறும்- சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்ற புலன்களோடு கூடிய வாய், கண், மெய், செவி, மூக்கு ஆகிய ஐந்து பொறிகளாகிய யானைகள்; சுரும்பு- வண்டுகள்; இண்டை- பல்வேறு வகைப்பட்ட மலர் மாலைகள்; வழிபாடு- பூசை)*

# திருவாவடுதுறை

**த**ஞ்சை மாவட்டத்தில் மாயூரத்தை அடுத்துள்ள திருவாவடுதுறை என்ற ஊரில் ஞானசம்பந்தர் தங்கியிருக்கும்போது அவர் தந்தையார் சிவபாத இருதயர் யாகம் செய்வதற்குப் பொன் வேண்டுமென்று மகனைக் கேட்கின்றார். எதனையும் இறைவனிடமே கேட்டுப் பெறுகின்ற இயல்புடைய பிள்ளையார் திருவாவடுதுறைப் பெருமானிடம் சென்று பொன் வேண்டுமென்று கேட்டுப் பாடிய பாடலாகும் இது;

இடரினுந் தளரினும் எனதுறுநோய்
தொடரினு முனகழல் தொழுதெழுவேன்
கடல்தனி லமுதொடு கலந்தநஞ்சை
மிடறினி லடக்கிய வேதியனே
இதுவோயெமை யாளுமா றீவதொன்றெமக்கு
இல்லையேல்
அதுவோ உனதின்னருள் ஆவடுதுறை அரனே.

"துன்பம் ஏற்படுகின்றபோதும், தளர்ந்த நிலை ஏற்படுகின்றபோதும், கொடுமையான நோய்கள் பற்றித் துன்பம் செய்கின்ற போதும் உன் திருவடியை மறவாமல் வணங்குவேன். பாற்கடலில் அமுதத்தோடு சேர்ந்து தோன்றிய ஆலகாலமாகிய நஞ்சைக் கண்டத்தில் அடக்கியவனே! ஆவடுதுறையில் உள்ளவனே! யான் விரும்பிக் கேட்கின்றபொருளை நீ தரவில்லையானால் என்னை ஆட்கொண்ட விதம் இதுதானோ? உனது இனிய அருளும் இதுதானோ?"

*(இடர்- துன்பம்; தளர்- மனத்தளர்ச்சி; அமுதொடு கலந்த நஞ்சு-அமிழ்தத்தோடு கடலில் தோன்றிய ஆலகால விஷம்; மிடறு- தொண்டை)*

# மதுரை

*மதுரைக்குச் சென்ற ஞானசம்பந்தர் பிற சமயத்திலிருந்த,* ***நின்ற சீர் நெடுமாறன்*** *என்ற பாண்டியனைச் சைவ சமயத்துக்கு மீண்டும் வருமாறு செய்து அங்கேயே தங்கி ஆலவாய் அண்ணலை வணங்கி இருந்தார். அப்பொழுது அவருடைய தந்தையாராகிய சிவபாத இருதயர் பாண்டிநாடு சென்ற மகனைக் காண வேண்டும் என்ற கருத்தால் மதுரை வந்து சேர்ந்தார். தம்மை தேடிக் கொண்டு மதுரைக்கு வந்த தந்தையாரைப் பார்த்த பிள்ளையார் "சீர்காழியில் உள்ள இறைவன் எவ்வாறு உள்ளான்?" என்று கேட்கிறார்.*

மண்ணில் நல்லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணினல் லகதிக்கி யாதுமோர் குறைவிலைக்
கண்ணினல் லஃதுறும் கழுமல வளநகர்ப்
பெண்ணினல் லாளொடும் பெருந்தகை இருந்ததே.

*"இவ்வுலகின்கண் நல்ல முறையில் தினமும் வாழலாம்; சிந்தித்துப் பார்த்தால் அடுத்த உலகில் பெற வேண்டிய நல்ல கதிக்கும் யாதொரு விதமான குறையும் ஏற்படாது; கண்ணுக்கு இனிய நல்ல வளத்தோடு கூடிய கழுமலம் என்னும் சீர்காழிப் பதியின்கண் பெண்ணின் நல்லவளாகிய இறைவியுடன் பெருந்தகையாகிய சிவபிரான் நலமாக இருக்கின்றான் அல்லவா?"*

***(மண்ணில்- இப்பூவுலகத்து; வைகலும்-நாள்தோறும்; எண்ணின்-சிந்தித்துப் பார்த்தால்; நல்ல கதிக்கு- மோட்சத்துக்கு; கண்ணின் நல்லது உறும்- கண்ணுக்கினிய வளப்பத்தோடு கூடிய)***

# பொது

***ஞா****னசம்பந்தர் தனது திருமண நன்னாளில் மணம் காண வந்து அமர்ந்திருக்கின்ற அன்பர்களைக் கண்டு இறைவன் திருவடி சேரும் நேரம் அணுகிவிட்டதை உணர்ந்து திரு ஐந்து எழுத்தின் பெருமையைப் பாடியதாகும் இப்பாடல்.*

காதலாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக் குய்ப்பது
வேத நான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாதன் நாமம் **நமச்சி வாயவே.**

*"இறைவனிடத்துக் காதல் கொண்டு, மனம் கசிந்து, கண்ணீர் நிறைந்து, அந்நிலையில் ஓதுகின்றவர்களை வீடு பேறு பெறச் செலுத்துவது (யாதெனில்) நான்கு வேதங்களைக் காட்டிலும் மெய்ப் பொருளாக உள்ளதும், இறைவனுடைய பெயராக உள்ளதுமாகிய* ***"நமச்சிவாய"*** *என்று சொல்லப்படும் திரு ஐந்து எழுத்து.*

*(வேதம் நான்கு- இருக்கு, யஜுர், சாமம், அதர்வணம் ஆகிய நான்கு வேதங்கள்)*



# மதுரை

*மதுரையம்பதிக்குச் செல்கின்ற ஞானசம்பந்தருக்கு மதுரைக் கோயிலைத் தூரத்திலிருந்தே சுட்டிக்காட்டி, புறச் சமயிகளாலே, மீனாட்சியின் கோயில் மூடப்பெற்றாலும், இறுதியிலே மதுரையை ஆண்ட கூன் பாண்டியன் மனைவியாகிய மங்கையர்க்கரசியின் உள்ளத்து உறுதியின் பயனாக இறைவனுக்கு அன்றாடம் பூசை நடை பெறுகிறது என்பதை அடியார்கள் கூறக் கேட்டுப் பாடியதாகும் இப்பாடல்:*

மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை
வரிவளைக் கைம்மடமானி
பங்கயச்செல்வி பாண்டிமா தேவி
பணிசெய்து நாள்தொறும் பரவ
பொங்கழ லுருவன் பூதநாய கன்நால்
வேதமும் பொருள்களு மருளி
அங்கயற்கண்ணி தன்னொடும் அமர்ந்த
ஆலவா யாவது மிதுவே.

*"**மங்கையர்க்கரசி** என்னும் பெயர் உடையவரும் சோழனின் மகளாவாரும், வளையல்களை அணிந்த கைகளை உடையவரும், மானியர்குடி எனப் பெறும் சோழர் குடியில் பிறந்தவரும், தாமரையில் வாழ்கின்ற இலக்குமி போன்றவரும் ஆகிய பாண்டி மாதேவி*

நாள்தோறும் வழிபட்டுப் பணிவிடைகள் செய்து வருவதால், நெருப்பின் உருவினை உடையவனும், எல்லா பூதங்களுக்கும் நாயகனும், வேதத்தையும் பொருள்களையும் அருளினவனும் ஆகிய சொக்க லிங்கப்பெருமான், அழகிய கயல் கணி மீனாட்சியுடன் அமர்ந்த ஆலவாய் இதுவே அன்றோ."

*(வளவர்கோன்- சோழன்; வரிவளை- வரிகளையுடைய வளைகள்;- மானி- மான ஆபரணன் என்று சோழருக்குப் பெயராதலால், சோழர் குடியில் பிறந்தவரை மானி என்று பேசுகிறார்; பங்கயச் செல்வி- தாமரையில் உறைகின்ற இலக்குமி; அங்கயற் கண்ணி- அழகிய மீன்போன்ற கண்ணை உடையவளாகிய மீனாட்சி.)*

# திருநல்லூர்ப் பெருமணம்

**சீ**ர்காழியை அடுத்துள்ள **திருநல்லூர்** என்ற ஊரிலுள்ள **நம்பாண்டார்** என்பவரின் மகளை ஞானசம்பந்தர்க்குத் திருமணம் செய்ய ஏற்பாடு செய்தார்கள். திருமண நாளில் திருமணம் செய்துகொண்ட புதுப் பெண்ணையும், திருமணத்தைக் காணவந்திருந்த அடியார்களையும் **நல்லூர்ப் பெருமணம்** என்ற அவ்வூர்க் கோயிலுக்கு அழைத்துச் சென்று ஆண்டவனை நோக்கி 'எனக்கு இம்மண வாழ்வு வேண்டா; உன் திருவடியே வேண்டும்' என்ற கருத்தில் பிள்ளையார் பாடிய பாடல்கள் இவை:

அன்புறு சிந்தைய ராகி அடியவர்
நன்புறு நல்லூர்ப் பெருமணம் மேவிநின்று
இன்புறும் எந்தை இணையடி ஏத்துவார்
துன்புறு வாரல்லர் தொண்டுசெய் வாரே.

"அன்பு நிறைந்த சிந்தையோடு கூடி, அடியார்கள், முக்தியைத் தருகின்ற நல்லூர்ப் பெருமணத்தில்உள்ள இறைவனை அடைந்து, நாளும் இன்பத்தைத் தருகின்ற எந்தையாகிய இறைவனின் திருவடிகளை ஏத்துபவர்கள் (அனைத்தும் அவனருள் என்ற கருத்தில்) தொண்டு செய்பவர்கள் ஆகலின் துன்பத்தை அடைய மாட்டார்கள்."

*(நன்புறு– முக்தியை அடைவிக்கின்ற; நல்லூர்ப் பெருமணம்– திரு நல்லூரிலுள்ள பெருமணம் என்ற திருக்கோயில்; 3,4 ஆம்*

*அடிகளின் பொருள்- இறைவனின் திருவடியை ஏத்துபவர்கள் தொண்டு செய்கின்றவர்கள். ஆதலால் துன்பத்தை அடையமாட்டார்கள்.)*

நறும்பொழிற் காழியுள் ஞானசம் பந்தன்
பெறும்பத நல்லூர்ப் பெருமணத் தானை
உறும்பொரு ளாற்சொன்ன ஒண்தமிழ் வல்லார்க்கு
அறும்பழி பாவம் அவலம் இலரே.

*"நறுமணம் கமழும் சோலைகள் சூழ்ந்த சீர்காழியில் தோன்றிய ஞானசம்பந்தனாகிய நான், பெறுதற்கரிய உதவியை வழங்குகின்ற நல்லூர்ப் பெருமணத்தில் உள்ளவனை, அவன் திருவடியை அடைகின்ற கருத்தோடு பாடிய சிறந்த பயனைத் தரவல்ல தமிழ்ப் பாடல்களைப் பாடவல்லாருக்குப் பழிபாவம் அறும், மேலும், அவலமாகிய பிறவித் துன்பமும் அற்றுப் போகும்.*

*(நறும்பொழில்- நல்ல மணம் கமழும் சோலை; உறும் பொருளால்- திருவடியின் சேரும் எண்ணத்தோடு; ஒண்தமிழ்- சிறந்த பயனைத் தரக்கூடிய தமிழ்; வல்லார்- மனம் கசிந்து பாட வல்லவர்கள்; அவலம்- பிறவித் துன்பம்)*



# திருநாவுக்கரசர் தேவாரம்

**தி**ருமழபாடி நாட்டில் திருவாமூர் என்னும் ஊரில் வேளாளர் குலத்தில் **புகழனார், மாதினியார்** என்ற இரு வருக்கும் மகனாய்ப் பிறந்தவர் நாவுக்கரசர் என்னும் **மருணீக்கியார்** ஆவர். சைவராகப் பிறந்த இவர், இளமைப் பருவத்தில் உண்மையைக் காணக் கருதி மற்றொரு சமயத்தில் சேர்ந்து, அதனைக் காண முடியாமல் இறைவனால் சூலை நோய் (வயிற்று வலி) கொடுக்கப் பெற்று ஆட்கொள்ளப் பெற்றார். வயிற்று வலியைப் போக்கிக்கொள்ள ஏனைய வழிகள் பயன்படாமல் போகவே, நாவுக்கரசப் பெருமான் திருவதிகை வீரட்டானத்தில் வந்து சிவபெருமானைப் பாடி, இந்நோயைப் போக்கிக் கொண்டு, சிறந்த அடியாராகப் பல ஆண்டுகள் வாழ்ந்து, ஞானசம்பந்தர் முதலிய அடியார்களைப் பலமுறை சந்தித்து, உடன்

இருந்து, இறுதியாக 81ஆம் வயதில் இறைவன் திருவடியை அடைந்தார்.

இவருடைய தேவாரப் பாடல்கள் 4, 5, 6 ஆகிய மூன்று திருமுறைகளாக வகுக்கப்பட்டுள்ளன. நாலாம் திருமுறையுள் பண்களும், தாளமின்றிப் பாடப்படுகின்ற **திருவிருத்தம்** தாளத்தோடும் தாளம் இன்றியும் பாடப்படுகின்ற **திருநேரிசை,** ஐந்தாம் திருமுறையில் **திருக்குறுந்தொகை** என்ற பாடல்கள், ஆகியவையும் ஆறாம் திருமுறையில் தாளமின்றி சுத்தாங்கமாகப் பாடப் படுகின்ற **திருத்தாண்டகமும்** உள்ளன.

# திருவதிகை வீரட்டானம்

**வி**ழுப்புரத்தை அடுத்த பண்ணுருட்டியிலிருந்து சில கல் தொலைவிலுள்ளது திருவதிகை வீரட்டானம் என்ற ஊர். முதன் முறையாக நாவுக்கரசர் தம் சூலை நோயைப் போக்கிக் கொள்ளப் பாடியது இவ்வூரில்தான்.

கூற்றாயின வாறு விலக்ககிலீர்
கொடுமைபல செய்தன நானறியேன்
ஏற்றாயடிக் கேயிர வும்பகலும்
பிரியாது வணங்குவன் எப்பொழுதும்
தோற்றாதென் வயிற்றி னகம்படியே
குடரோடு துடக்கி முடக்கியிட
ஆற்றேனடி யேன்அதி கைக்கெடில
வீரட்டா னத்துறை யம்மானே.

"எமனைப்போல் அடியேனை வந்து வருத்தும் இச்சூலை நோயை (வயிற்று வலியை) விலக்க மாட்டீர்; இந்நோயை நான் அடைவதற்குக் காரணமாகக் கொடுமைகள் பல செய்து விட்டேனோ எனில் அவற்றை நான் அறியேன்; விடையில் ஏறியுள்ள பெருமானே! இரவு பகல் எப்பொழுதும் பிரியாமல் உன் திருவடியையே வணங்குவேன். என் வயிற்றின் உள்ளே குடலோடு கலந்து என்னை முடக்கி வருத்துதலால் அடியேன் அதைப் பொறுக்காமல் வருந்துகின்றேன்; இவ்வருத்தம் அகற்றி ஆட்கொள்ள

வேண்டும்... திருவதிகை வீரட்டானத்தில் உறைகின்ற பெருமானே!"

*(கூற்று-எமன்; விலக்ககிலீர்-போக்கமாட்டீர்; கொடுமை பல செய்தன நான் அறியேன்- நான் செய்துள்ள தீமைகள் (உள எனில்) நான் அறியேன் (அவை நான் அறிந்து செய்தன அல்ல) ஏற்றாய்- ரிஷப வாகனத்தை உடையவனே; தோற்றாது- இன்னது என்று வெளிப்பட்டு நிற்காமல்; வயிற்றின் அகம்படியே- அடி வயிற்றின் உள்ளே; துடக்கி-கட்டுப்பட்டு; முடக்கி- என்னை நிமிர ஒட்டாமல் முடக்கி விடுகின்ற (வலி)*

# திருவையாறு

திருநாவுக்கரசர் கயிலையைத் தரிசிக்க விரும்பி வடதிசை நோக்கி நடந்து சென்றார். உடலில் வலுஅற்றுப் போகவே ஊர்ந்தே செல்லத் தொடங்கினார். வழியில் ஒரு பெரியவர் அவரைத் தடுத்து அடுத்துள்ள குளத்தில் மூழ்கினால் திரு ஐயாற்றை அடையலாம் என்றும், அங்கே இறைவன் கயிலையில் இருந்த கோலத்தைக் காணலாம் என்றும் கூறினார். அதன்படி அடிகள் அங்குள்ள குளத்தில் மூழ்கி ஐயாற்றுக்கு வந்து சேர்ந்தார். கயிலையிலிருந்து மீளும்பொழுது நடந்து- வராமல் குளத்தில் மூழ்கி ஐயாற்றுக்கு வந்த உண்மையைத்தான் "யாதும் சுவடு படாமல் ஐயாறு அடைகின்றபோது" என்ற அடி அறிவிக்கின்றது.

மாதர்ப் பிறைக்கண்ணி யானை
மலையான் மகளொ டும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப்
புகுவா ரவர்பின் புகுவேன்
யாதுஞ் சுவடுப டாமல் ஐயாறடை
கின்ற போது
காதல் மடப்பிடி யோடுங் களிறு வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதம்
கண்டறியாதன கண்டேன்.

"விரும்பத்தகுந்த பிறைச் சந்திரனைத் தலைமாலையாகச் சூடியவனை, இமய மன்னன் புதல்வியாகிய உமாதேவியுடன் சேர்த்துப் பாடி, மலரையும் நீரையும் கொண்டு வழிபட்டுச் செல்லும் அடியார்களின் பின்னே யானும் புகுவேன். நடந்து வந்த சுவடு ஒரு சிறிதும் இல்லாமல் திருஐயாற்றை அடைந்த அந்த நேரத்தில், விரும்பத் தகுந்த இளம் பெண் யானை போன்றவளாகிய உமாதேவியுடன் ஆண் யானை போன்ற இறைவன் வரக் கண்டேன். அவன் திருவடிகளை கண்டேன்; அதன் பயனாக முன்னர்க் கண்டு அறியாதனவாகிய பலவற்றைக் கண்டேன்."

*(மாதர்- விரும்பத்தகுந்த; கண்ணி- தலைக்கு அணியும் மாலை; போது- மலர்; யாதும் சுவடு படாமல்- நடந்து வராமலேயே, களிறு- ஆண் யானை; பிடி-பெண் யானை)*

# பொது



புறச் சமயத்திலிருந்து சைவ சமயத்திற்கு மீண்டு விட்ட திருநாவுக்கரசரை வெறுத்த பழஞ்சமயத்தார்கள் அரசனுடைய தயவைக் கொண்டு நாவுக்கரசரைப் பிடித்துவந்து கல்லிலே கட்டிக் கடலில் போட்டுவிட்டார்கள். இறைவனுடைய திருவருளால் அந்தக் கல்லே தெப்பமாக அமைந்தது. அக்கல் தெப்பத்தின் மேலே அமர்ந்து நாவுக்கரசர் பெருமான் திரு ஐந்து எழுத்தின் பெருமையை இப்பாடல் மூலம் கூறுகின்றார்.

சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது **நமச்சி வாயவே.**

"சொல்லின் வடிவாகவும் சொல்லின் துணையாக உள்ள பொருள் வடிவாகவும் உள்ளவன்; (சொல்லின் பொருளாக உள்ள வேத முதல்வன்) ஒளி மயமாகவுள்ள வீடு பேற்றின் தலைவன்; அவனுடைய பொன் போன்ற இரண்டு செம்மையான திருவடிகளை மனம்

பொருந்துமாறு கைகளால் தொழுதால், கல்லையே துணையாகக் கட்டி (கல்லோடு கட்டி) கடலில் எறிந்தாலும் (அப்பொழுதும்) **'நமச்சிவாய'** என்ற அவ்வைந்து எழுத்து நல்ல துணையாக அமையும்"

*(சொல் துணை வேதியன்- சொல்லின் பொருளான வேதியன்; சோதி வானவன்- பரஞ் சோதியாய் உள்ள அழியாத வீட்டு உலகினன்; பொன் துணை திருந்து அடி- பொன் அடி, துணை அடி, திருந்து அடி; பொருந்த-கை வணக்கத்தோடு மனமும் பொருந்தச் செய்யும் வண்ணம்; கல் துணைப் பூட்டியோர் கடலில் பாய்ச்சினும்- ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலம் ஆகிய கல்லோடு இருவினை என்று சொல்கின்ற கயிற்றால் கட்டிப் பிறவிக் கடலில் வீழ்த்தப்பட்ட உயிர்கள் நமச்சிவாய என்னும் மந்திரத்தைக் கொண்டு பிறவியைப் போக்கலாம்.)*

இல்லக விளக்கது இருள்கெ டுப்பது
சொல்லக விளக்கது சோதி யுள்ளது
பல்லக விளக்கது பலரும் காண்பது
நல்லக விளக்கது **நமச்சிவாயவே.**

"இவ்வுடம்புக்குள்ளே விளக்கமாக அமர்ந்திருப்பது; அக இருளைக் கெடுப்பது; சொல்லின் உள்ளே நின்று விளங்குவது; சோதியாக உள்ளது; கோடிக்கணக்கான உயிர்களுக்கும் உள்ளே நின்று விளங்குவது; எல்லா சமயத்தாரும் காணும் முறையில் அமைந்தது. ஞான ரூபத்தில் உள்ளே விளங்கும் விளக்காவது **'நமச்சிவாய'** என்பதே ஆகும்.

*(இல்-வீடு; அதாவது உடம்பு; சொல் அக விளக்கு- சொல்லின் பொருளாக நின்று விளங்குவது; பல் அக விளக்கு- பல உயிர்களுக்கும் துணையாக உள்ளது; நல் அக விளக்கு- ஞானம்நிறைந்த உள்ளத்தின் உள்ளே தோன்றும் விளக்கு.)*



# திருவொற்றியூர்

திருவொற்றியூர் சென்ற நாவுக்கரசுப் பெருமான் எழுத்து அறியும் பெருமானைத் தொழுது பாடிய பாடலாகும் இது.

மனமெனுந் தோணி பற்றி மதியெனும்
கோலை ஊன்றிச்
சினமெனுஞ் சரக்கை ஏற்றிச் செறிகட
லோடும் போது
மதனெனும் பாறைதாக்கி மறியும்போது
அறிய வொண்ணா(து)
உனையுனும் உணர்வை நல்காய் ஒற்றியூர்
உடைய கோவே.

"மனம் என்னும் தோணியைப் பிடித்து, அறிவு என்ற கோலை ஊன்றி, சினம் என்னும் சரக்கை ஏற்றி, பாசம் என்ற கடலின்கண் தோணியைச் செலுத்தும்போது, மன்மதன் என்ற பாறை தாக்கி, அத்தோணி அழியும்போது, உன்னை அறிகின்ற அறிவு இன்றி வருந்துவேன். ஆதலால், ஒற்றியூரை உடைய தலைவனே! உன்னை உணர்கின்ற உணர்வை நல்குவாயாக!"

(செறி கடல்- பாசமாகிய கடல்; மதன்-மன்மதன் காமம் என்னும் பாறை; மறிதல்- அழிதல்; உன்னை உன்னும்- அகங்காரம் அழிந்து உன்னையே நினைக்கின்ற)

திருவொற்றியூரில் வியாகரண மண்டபம் என்ற ஒரு மண்டபம் உண்டு. அதில் இலக்கண விவாதம் நடைபெறும். அதனால் இறைவனுக்கு எழுத்தறியும் பெருமான் (வியாகரணம்- இலக்கணம்) என்று பெயர் வந்தது.





# சிதம்பரம்

**கோ**யில் எனப் பெறும் சிதம்பரம் சென்று வழிபடுகின்ற நாவுக்கரசப் பெருமான், ஆடவல்ல பெருமானுடைய வடிவத்தில் ஈடுபட்டு, அப்பெருமானுடைய அபயகரத்தில் ஈடுபடுகின்றார். அந்தக் கரம் அடியார்களைப் பார்த்து, "எப்போது வந்தாய்" என்று கேட்பது போல் இருக்கின்றது என்று பாடுகின்றார்.

ஒன்றியிருந்து நினைமின்கள் உம்தமக்
கோர் கூனமில்லைக்
கன்றிய காலனைக் காலாற்
கடிந்தான் அடியவர்க்காச்

சென்று தொழுமின்கள் தில்லையுள்
சிற்றம் பலத்துநட்டம்
என்றுவந் தாய்என்னும் எம்பெரு
மான்தன் திருக்குறிப்பே

"இறைவன் திருவடியில் பதித்த நெஞ்சோடு இடைவிடாது நினைத்துப் பாருங்கள்; உங்கட்கு ஒருவிதமான குறையும் வராது; கோபத்தோடு வந்த எமனை மார்க்கண்டேயனுக்காக இரங்கிக் காலால் உதைத்தவனும், தில்லையுள் சிற்றம்பலத்தில் ஆடுபவனும் ஆகிய கூத்தனுடைய நடனத்தைச் சென்று தொழுங்கள்; அப்பெருமானுடைய கவித்த திருக்கை "என்று வந்தாய்" என்று கேட்பதுபோல் குறிப்புக் காட்டி இருக்கின்றது."

*(ஒன்றியிருந்து- ஒருமுகப்பட்ட மனத்தோடு; ஊனம்-குறை, குற்றம்; கன்றிய-கோபத்தோடு வந்த; எமனை; அடியவர்க்கா- மார்க்கண்டேயனுக்காக)*



# பொது

*புறச் சமயிகளால் சுண்ணாம்புக் காளவாயில் போடப்பட்டார் நாவுக்கரசுப் பெருமான்; ஆனால், இறைவன் திருவருளால் அந்நீற்றறை (சுண்ணாம்புக் காளவாய்) குளிர்ந்த பொய்கை போன்றிருந்தது. அந்த உணர்வோடு அவர் பாடிய பாடல்;*

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறை பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே

*"குற்றமிலாத வீணையின் நாதமும், மாலையில் தோன்றுகின்ற நிலவின் குளிர்ச்சியும், வீசுகின்ற தென்றலின் சாயலும், சிறந்த இளவேனில் காலத்தின் மாட்சியும், ஒலிக்கின்ற வண்டுகள் மொய்க்கும் பொய்கையின் குளிர்ச்சி போன்ற இன்பமும் பயப்பதாகும் ஈசனாகிய இறைவனின் திருவடி நிழல்"*

***(மாசில் வீணை-சுர இலக்கணங்கள் வழுவாத வீணையின் நாதம்; மாலைமதி-பூரண சந்திரன்; மூசு வண்டு-மொய்க்கின்ற வண்டுகள்)***

# வைத்தீஸ்வரன் கோயில்

**வை**த்தீஸ்வரன் கோயில் என்று வழங்குகின்ற புள்ளிருக்கும் வேளூரைச் சென்று வணங்கிய நாவுக்கரசுப் பெருமான் பாடுகின்றார். (சிதம்பரத்தை அடுத்துள்ள இவ்வூர் புகை வண்டிப் பாதையில் உள்ளது)

பேராயிரம்பரவி வானோரேத்தும் பெம்மானைப்
பிரிவிலா அடியார்க் கென்றும்
வாராத செல்வம் வருவிப்பானை மந்திரமும்
தந்திரமும் மருந்து மாகித்
தீரா நோய் தீர்த்தருள வல்லான் தன்னைத்
திரிபுரங்கள் தீயெழத்திண் சிலைகைக்கொண்ட
போரானைப் புள்ளிருக்கு வேளூரானைப்
போற்றாதே ஆற்றநாள் போக்கினேனே.

"இறைவனுடைய ஆயிரக்கணக்கான பெயர்களை யும் சொல்லித் தேவர்கள் பரவி ஏத்துகின்ற பெருமானை, என்றும் அவனை விட்டு நீங்காத அடியார்க்கு, வாராத செல்வமாகிய பிறவி நீக்கம் என்ற செல்வத்தைத் தருபவனும் (கிடைத்தற்கரிய செல்வத் தைத் தருபவனும்) திரு ஐந்து எழுத்தும் தந்திர சாஸ்திரங்களும் பிறவியைப் போக்குகின்ற மருந்துமாகி, ஆணவம், கன்மம், மாயை என்னும் தீரா நோய்களாகிய மும்முலங்களையும், பிறவியையும் போக்கி அருள்பவனும் திரிபுரங்கள் நெருப்புப்பற்றி எரிய வலிமை பொருந்திய மாமேரு மலையாகிய் வில்லைக்

*கையில் வைத்துள்ள வீரனும், புள்ளிருக்கும் வேளூரில் உள்ளவனுமாகிய இறைவனைப் போற்றாமல் பல காலத்தை வீணாக்கி விட்டேனே!"*

(வாராத செல்வம்- கிடைத்தற்கரிய செல்வம்; (அதாவது வீடு பேறு; அன்றியும் இவ்வுலக செல்வத்தையும் ஆம். மந்திரம் - ஐந்து எழுத்து; மருந்து - ஐபதபம் முதலியன. நோய் - பிறவி நோய்.

தந்திரம்-ஆகமங்கள்

புள்ளிருக்கு வேளூர்-புள், இருக்கு, வேள். கழுகின் வேந்தர்களும், (சடாயு, சம்பாதி) இருக்கு வேதமும், முருகக் கடவுளும் வழிபட்ட இடம். போரானை- போர் உடையவனை.



# சுந்தரர் தேவாரம்

திருமுனைப்பாடி நாட்டில் திருநாவலூர் என்ற ஊரில் **புகழனார், இசை ஞானியார்** என்ற இருவருக்கும் மகவாய்த் தோன்றி வளர்ந்தவர் நம்பியாரூரர் ஆவார். பிற்காலத்தில் நம்பியாரூரரைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் என்று கூறத் தொடங்கினர். தம்முடைய திருமணத் தின்போது இறைவனால் தடுத்து ஆட் கொள்ளப் பெற்ற பெருமை வாய்ந்தவர் நம்பியாரூரர். தம்மை தடுத்து ஆட்கொண்ட இறைவனைத் திருவெண் ணெய் நல்லூரில் சென்று கண்டு பாடியதாகும் இப்பாடல். திருவெண்ணெய் நல்லூர் தென் ஆர்க்காடு மாவட்டத்தில் பண்ணுருட்டியை அடுத்துள்ளது.

சுந்தரமூர்த்தி சுவாமிகளின் பாடல்கள் முழுவதும் ஏழாம் திருமுறையாக வகுக்கப்பெற்றுள்ளன.

பித்தா பிறை சூடிபெரு மானேயருளாளா!
எத்தான்மற வாதே நினைக் கின்றேன்
மனத் துன்னை
வைத்தாய்ப் பெண்ணைத் தென்பால் வெண்ணெய்
நல்லூ ரருள்துறையுள்
அத்தா உனக் காளாய் இனி அல்லேன் எனலாமே.

"பித்தனே! பிறையைத் தலை மாலையாகச் சூடியவனே! பெருமானே! அருள் உடையவனே! எந்நிலையிலும் மறவாமல் உன்னை நெஞ்சத்துள் நினைக்கின்றேன். அவ்வாறு நினைக்கும் வண்ணம் உன்னை என் நெஞ்சத்துள் வைத்து அருளினாய்! பெண்ணையாற்றின் தென் கரையில் திருவெண்ணெய் நல்லூரின்கண் "அருட்டுறை" என்னும் திருக்கோயிலினுள் எழுந்தருளியிருக்கும் எம் தந்தையே! முன்பே உனக்கு அடியவன் ஆகிவிட்டு இனி முடியாது என்று சொல்வது பொருந்துமா?"

(பித்தா- பித்துக்கொண்டவர்கள்; வேண்டியவர் வேண்டாதவர் என்ற வேறுபாடு பாராட்டாததைப் போல இறைவனும் வேண்டியவர் வேண்டாதவர் என்ற வேறுபாடற்று அருள் செய்கிறான் ஆதலின் "பித்தன்" என்று கூறப்படுகிறான். பிறைசூடி- பிறைச் சந்திரனைத் தலையில் உடையவன்; மனத்து உன்னை வைத்தாய்- நம்பியாரூரர் உள்ளத்தில் இறைவன் தானே வந்து குடி புகுந்துள்ளான்)



# திருவாலங்காடு

**ந**ம்பியாரூரர் திருவொற்றியூரில் தாம் மணந்து கொண்ட சங்கிலியாரைப் பிரிந்து புறப்பட்டவுடன் இரண்டு கண்களையும் இழந்து, வழிப்போவார் வழி காட்ட ஒவ்வோர் ஊராகச் சென்று இறைவனைப் பாடிக்கொண்டு திருவாலங்காட்டை அடைந்து, காரைக்கால் அம்மையார் தலையால் நடந்த இடமாதலின், அவ்வூரினுள் தம் காலால் மிதித்து நடக்க அஞ்சித் தூரத்தே நின்று பாடியதாகும் இப்பாடல்:

*(திருவாலங்காடு ஆர்க்கோணத்தை (Arkonam) அடுத்த புகைவண்டி நிலையமாகும்)*

முத்தா முத்தி தரவல்ல முகிழ்மென்
　　முலையாள் உமைபங்கா
சித்தா சித்தித் திறங்காட்டும்
　　சிவனே தேவர் சிங்கமே
பத்தா பத்தர் பலர் போற்றும்
　　பரமா! பழைய னூர்மேய
அத்தா!ஆலங் காடா!உன்
　　அடியார்க் கடியேன் ஆவேனே.

"இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கியவனே! உயிர்களுக்கெல்லாம் வீடு பேற்றைத் தர வல்ல உமாதேவியை இடப் பக்கத்தில் கொண்டவனே! சித்திகளை அடைவதற்குரிய வழிகளை அருளும் சிவ பெருமானே! தேவர்கட்குத் தலைவனே! அடியார்

களின் பற்றுக்கோடாய் உள்ளவனே! அடியார்கள் பலரும் போற்றுகின்ற பரம்பொருளே! பழையனூரை அடுத்துள்ள, திருவாலங்காட்டில் உறையும் தலைவனே! அடியேன் உன் அடியார்க்கு அடியனாக வாழ்வேன்"

(முத்தா - கட்டுகளிலிருந்து நீங்கியவன்; சித்தா - சித்திகளைப் பெற்றவன்; தேவர் சிங்கமே- தேவர்களுள் சிங்கம் போன்றவனே; பத்தா - அடியார்களுக்குப் பற்றாய் உள்ளவனே; அத்தா - அப்பா! பழையனூர் மேய ஆலங்காடு - திருவாலங் காட்டை அடுத்துள்ள பழையனூர் என்னுமிடம் வரலாற்றுப் பெருமையுடையதாகும்.)



# திருவெண்பாக்கம்

**தி**ருவொற்றியூரில் கண் இழந்த நம்பியாரூரர் ஒவ்வோர் ஊராகச் சென்று இறைவனை வணங்கித் திருவெண்பாக்கம் என்ற ஊரை அடைந்து, தம் கண் இழந்த நிலைக்கு வருந்தித் தம்முடைய தோழனாகிய சிவபெருமானை நோக்கி, "கோயிலுக்குள் நீ இருக்கின்றாயா?" என்று கேட்க, இறைவன் உள்ளே யிருந்து அயலார்போல, **"உ(ள்)ளோம், போகீர்"** என்றானாம், நம்பியாரூரர் தாம் செய்த பிழையை நினைத்து வருந்திப் பாடிய பாடலாகும் இது.

*(திரு எவ்வுளூரை அடுத்துள்ள பூண்டி நீர்த்தேக்கத்தின் உள்ளே திருவெண்பாக்கக் கோயில் இப்பொழுது அமிழ்ந்துவிட்டது.)*

பிழையுளன பொறுத்திடுவ ரென்றடியேன் பிழைத்தக்கால்
பழியதனைப் பாராதே படலமென்கண் மறைப்பித்தாய்
குழைவிரவு வடிகாதா! கோயில் **உளாயோ?** என்ன
உழையுடையான் உள்ளிருந்(து) **உளோம்போகீர்** என்றானே.

*"நான் ஏதாவது பிழைகள் செய்தாலும் என்னுடைய தோழனாகிய இறைவன் பொறுத்துக் கொள்வான் என்ற நினைவில் அடியேன் தவறு செய்தால், என்னை தண்டிப்பதால் ஏற்படுகின்ற பழியைக் கூடப் பொருட்படுத்தாமல் என் கண் படலத்தை மறைப்பித்து விட்டாய். குழை பொருந்திய நீண்ட காதினை உடையவனே! "நீ கோயிலுக்கு* ***உள்*** *இருக்கின்றாயா?" என்று நான் கேட்க, மானை ஏந்திய அப்பெருமான் உள்ளேயிருந்த படியே,* ***"உள்ளோம், போங்கள்"*** *என்று சொல்லி விட்டானே."*

*(பிழைத்தக்கால் - தவறு செய்தால்; படலம் என் கண் - என் கண் படலம், என் கண் பார்வை; குழை - ஆண்கள் காதில் அணியும் அணி; வடிகாதா - நீண்ட காதினை உடையவனே; உழை - மான்)*



# காஞ்சீபுரம்

**க**ண்களை இழந்த நம்பியாரூரர் காஞ்சீபுரம் சென்று இறைவனை வழிபட்டு இறைவியின் திருவருளால் இடக்கண் பார்வையைப் பெற்றார். உமையின் திருவருளால் தாம் பெற்ற பார்வையில் மகிழ்ந்து பாடியதாகும். இப்பாடல்.

*(காஞ்சிப்பதி செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ளது.)*

எள்கலின்றி இமையவர் கோனை
ஈசனைவழி பாடுசெய் வாள்போல்
உள்ளத் துள்கி உகந்து உமை நங்கை
வழிப டச்சென்று நின்றவா கண்டு
வெள்ளங்காட்டி வெருட்டிட வஞ்சி
வெருவியோடித் தழுவ வெளிப்பட்ட
கள்ளக் **கம்பனை** எங்கள் பிரானைக்
காணக் கண்ணடி யேன் பெற்றவாறே

"தானும் இறைவனின் ஒரு கூறு ஆதலால், ஈசனை வழிபாடு செய்யத் தேவையில்லை என்று இகழாமல், தேவர்கள் தலைவனை, ஈசனை வழிபாடு செய்கின்ற

ஏனைய பெண்களைப்போலவே, முதலில் உள்ளத்தின் உள்ளேயே நினைந்து செய்யும் வழிபாட்டை முடித்து, அடுத்தபடியாக உமாதேவியானவள் பரமனைப் புறத்தேயும் வழிபடச் சென்று, அவ்வழிபாட்டில் நிலைத்ததைக் கண்டு, கம்பையாற்றின் கண் பெரு வெள்ளத்தைத் தோற்றுவித்து வெருட்ட, கொடி போன்றவளாகிய உமை அஞ்சி ஓடித் தன்னைத் தழுவிக் கொள்ள, அதன் பின்னர் அவள் கண்ணெதிரே வெளிப்பட்டு நின்ற கள்வனாகிய திரு ஏகம்பனை, எங்கள் தலைவனைக் காணும் முறையில் அடியேன் கண் பெற்றது வியப்பேயாகும்.”

உலகத்திலுள்ள பிற பெண்கள் இறைவனை வழிபடுவதைப் போலவே தாமும் இலிங்க வடிவில் இறைவனை வழிபட வேண்டும் என்று உமாதேவி நினைத்தார். காஞ்சியிலுள்ள கம்பையாற்றங்கரையில் மணலால் இலிங்கம் செய்து வழிபட்டார். அவருடைய அன்புப் பெருக்கை உலகிற்குக் காட்டுவதற்காக இறைவன் கம்பையாற்றில் வெள்ளம் வருமாறு செய்தான். உடனே உமாதேவியார் இலிங்கம் அழியாமல் இருப்பதற்காக அதைக் கட்டிப் பிடித்துக்கொண்டார், இறைவன் காட்சி தந்தான்.

(எள்கல் இன்றி- தன் வழிபாடு தேவை இல்லை என்று இகழாமல்; வழிபாடு செய்வாள் போல் - உலக உயிர்கட்கு வழிபாடு செய்வதன் முக்கியத்துவத்தை எடுத்துக் காட்ட, தானே வழிபடுபவளைப்போல்; உள்ளத்து உள்கி – மனத்தினால் செய்யும் வழிபாட்டை முடித்து; வழிபடச் செய்து நின்றவா கண்டு – முதலில் மன வழிபாட்டை முடித்துப் பின்னர் ஏனைய பெண்களைப்போல் இலிங்கத்தைச் செய்து வைத்துப் புற வழிபாட்டையும் செய்யத் தொடங்கினாள்; வெள்ளங்காட்டி வெருட்டி- கம்பையாற்றின் கரையிலே உமை வழிபட்டாளாதலின் அவ்வாற்றில் இறைவன் வெள்ளம் வருமாறு செய்தான்.)

# திருவாரூர்

*நம்பியாரூரர் காஞ்சிபூரத்தில் ஒரு கண்ணைப் பெற்று மெல்ல மெல்லத் திருவாரூர் சென்று இறைவனைப் பார்த்து மற்றொரு கண்ணையும் தர வேண்டுமென்ற குறிப்பை வைத்துப் பாடியதாகும் இப்பாடல்*

*(திருவாரூர் தஞ்சை மாவட்டத்திலுள்ள புகழ்வாய்ந்த பதி ஆகும்.*

மீளா அடிமை உமக்கே ஆளாய்ப் பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போல் உள்ளே கனன்று முகத்தான் மிகவாடி
ஆளாயிருக்கும் அடியார் தங்கள் அல்லல் சொன்னக்கால்
வாளாங்கு இருப்பீர் திருவாரூரீர் வாழ்ந்து போதீரே.

*திருவாரூரில் எழுந்தருளியிருக்கும் பெருமானே! உம்மை அன்றி பிறரை விரும்பாமலே, உமக்கே என்றும் மீளாத அடிமை செய்கின்ற ஆட்களாகி அந்நிலையில் பிறழாதிருக்கும் அடியார்கள் தங்கள் துன்பத்தை வெளியிட விரும்பாமல் மூடிவைக்கவும், அவர்கள் முக வாட்டத்தின் மூலம் பிறர் அறிகின்ற அளவு வெளிப்பட்டும், அந்நிலையில் அடியார்கள் உன்னிடத்தில் வந்து வாய் திறந்து தங்கள் துயரத்தை எடுத்துச் சொன்னால் அதனைக் கேட்டும் கேளாததுபோல் வாயை மூடிக்கொண்டு இருக்கின்றாய். இது உன்னுடைய இயல்பென்றால், நீ நன்றாக வாழ்ந்து போவாயாக!"*

அடியார்களது அடிமைத் தன்மையை வகுத்தருளல் அருள் செய்தல் இறைவனின் இன்றியமையாக் கடன் என்பதனை வலியுறுத்தி முறை இடுவர். அவ்வாறு முறை இடாது தம் நெஞ்சோடு நோதலும் உண்டு. கனன்று புகையும் நெருப்பைப்போல் வருந்துவர். அத்துயரம் அளவுக்கு மீறுமானால் இறைவனிடம் முறை இடுவர். உடனே ஆண்டவன் அத்துயரத்தைப் போக்க வேண்டும். அது போலவே நம்பி ஆரூரர் தம் துயரத்தை (கண் இழந்தது) இறைவன் போக்கவில்லையே என்ற வருத்தத்தால் இவ்வாறு பாடுகிறாரம். உடனே ஆண்டவன் அத்துயரத்தைப் போக்க வேண்டும். அது போலவே நம்பியாரூரர் தம் துயரத்தை (கண் இழந்தது) இறைவன் போக்கவில்லை என்ற வருத்தத்தால் இவ்வாறு பாடுகிறார்.

*(மீளா அடிமை- எல்லாப் பிறவிகளிலும் இறைவனுக்கே அடிமையாயிருத்தல்; மூளாத் தீ- பற்றி எரியாத மூட்டத்தில் உள்ள தீ; உள் கனன்று- மனத்தின் உள்ளேயே துயரத்தை வைத்துப் புதைத்து; அல்லல்- துன்பம்; வாளாங்கு இருப்பீர்- வாய் மூடி இருப்பீர்)*



# திருவஞ்சைக்களம்

**ந**ம்பியாரூரர் திருவஞ்சைக்களம் சென்று இறைவனைப் பாடி இனி இவ்வுலகில் வாழ விரும்பவில்லை என்று வேண்டிக் கொண்டார். உடனே கயிலையிலிருந்து நான்முகன், தேவர்கள் முதலியோர் இறைவன் ஆணையின் வண்ணம் வெள்ளையானை ஒன்று கொண்டுவந்து அதன்மேல் நம்பியாரூரை ஏற்றிக் கொண்டு கயிலை சென்றனர். கயிலை செல்லும் வழியில் நம்பியாரூரர் பாடிய பாடல்கள் இவை:

(திருவஞ்சைக்களம் மலையாள நாட்டில் கொல்லத்தை அடுத்துள்ளது.)

தானெனை முன்படைத்தான் அது
 அறிந்து தன் பொன்அடிக்கே
நான் எனப் பாடல் அந்தோ நாயி
 னேனைப் பொருட் படுத்து
வான் எனை வந்து எதிர்கொள்ள மத்த
 யானை அருள் புரிந்து
ஊன் உயிர் வேறு செய்தான் நொடித்
 தான் மலை உத்தமனே.

*"இறைவன் தானே என்னை முன்னர் இந்நில உலகில் தோற்றுவித்தான். அவன் தோற்றுவித்த அவ்வருளிப் பாட்டினை நினைந்து அவனுடைய திருவடிகட்கு நான் எத்தனைப்பாடல்கள் பாடினேன்? அந்தோ! அப்படி மிகுதியாகப் பாடாமல் இருக்கவும், நாயாகிய என்னையும் ஒரு பொருளாக மதித்துத் தேவர் உலகெலாம் வந்து எதிர்கொள்ளுமாறு செய்து, மதம் பொருந்திய வெள்ளை யானையை வருமாறு அருள் புரிந்து, என் உடல், உயிர் இரண்டையும் சிறப்பு அடையுமாறு செய்தான், திருக்கயிலையில் இருக்கின்ற உத்தமனாகிய இறைவன்."*

*(தான் எனை முன் படைத்தான்- என்னைப் பிறக்குமாறு அவனே முன்னர் அருள் செய்தான்; அது அறிந்து- அங்ஙனம் அவன் அருள் செய்ததை அறிந்து; நான் என பாடல்- நான் எவ்வளவு பாடல்கள் பாடினேன்.)*

ஊழிதோ றூழிமுற்று முயர் பொன்நொடித் தான்மலையைச்
சூழிசை யின்கரும்பின் சுவை நாவலஊரன் சொன்ன
ஏழிசை இன்றமிழால் இசைந் தேத்திய பத்தினையும்
ஆழி கடலரையா! அஞ்சை யப்பர்க் கறிவிப்பதே.

*"உலகம் அழியும் காலந்தோறும் மேலும் உயர்ந்து காணப்படுவதும், பொன் போன்ற நிறமுடையதும்*

ஆகிய திருக்கயிலாய மயிலையிலுள்ள பெருமானை, மிக்க புகழை உடையனவாகவும், கரும்பின் சுவையை உடையனவாகவும், ஏழு இசையோடு கூடிய இனிய தமிழால் நான் புகழ்ந்து பாடிய பத்துப் பாடலையும், ஆழமான கடலுக்குத் தலைவனே! (வருணபகவானே) திருவஞ்சைக்களத்திலுள்ள பெருமானுக்கு நீ அறிவித்தல் வேண்டும், (கயிலையில் பாடியதால், வருணனை நோக்கி இதனை நிலவுலகிலுள்ள அஞ்சைக்களத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவனுக்கு அறிவிப்பாயாக என்று ஆணையிடுகிறார்)

*(ஊழிதோறு ஊழி- முற்றும் உலகை அழிக்கின்ற ஒவ்வோர் ஊழிக் காலத்திலும்; நொடித்தான் மலை- கயிலாய மலை; சூழ் இசை-மிக்க புகழ்; ஆழி கடல் அரையா- ஆழ்ந்த கடலுக்குத் தலைவனே (வருணனே)*



# திருவாசகம்

மணிவாசகர் பாண்டி நாட்டில் வைகை ஆற்றங்கரையில் உள்ள திருவாதவூர் என்ற ஊரில் அவதரித்தவர் ஆவார். கல்வி கேள்விகளில் சிறந்திருந்தமையின் பாண்டிய மன்னனிடம் அமைச்சராய்ப் பதவி ஏற்றார். ஒரு முறை அரசனுக்குக் குதிரை வாங்கக் கொண்டு சென்ற அளவற்ற செல்வத்தைச் சிவபெருமானுக்குத் திருப்பெருந் துறையில் கோயில் எடுப்பதில் செலவு செய்துவிட்டார்.

இதனை அறிந்த மன்னவன் அவரை ஆற்றின் சுடு மணலில் நிறுத்தித் துன்புறுத்தித் தண்டித்தான். இறைவன் கருணையால் வைகை பெருகி மணிவாசகரின் பெருமையை உணர்த்தியது. மதுரையில் சொக்கப்பெருமான் மணிவாசகர் பொருட்டாக மண் சுமந்து பாண்டியனிடம் அடியும் பட்டார். இறுதியில் திருவாதவூரடிகளார் (மணிவாசகர்) திருவாசகம், திருக்கோவையார் என்ற நூல்களைப் பாடி இறைவன் திருவடி நிழல் எய்தினார்.

பானினைந் தூட்டும் தாயினும் சாலப்
பரிந்துநீ பாவியேனுடைய

ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
செல்வமே சிருபெருமானே
யானுனைத் தொடர்ந்து சிக்கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவதினியே

*"பால் ஊட்டவேண்டிய நேரத்தை நினைந்து பார்த்து ஊட்டும் தலையாய அன்புடைய தாயைவிடப் பரிவு காட்டி, பாவியேனாகிய என்னுடைய ஊனுடம்பை இளைக்குமாறு செய்து, அகத்தே ஒளி பெருகுமாறு செய்து, முடிவிலாத தேனைச் சொரிந்து, யான் செல்லும் இடந்தோறும் (என்னை ஆட்கொள்ள வேண்டி) என்னைத் தொடர்ந்து வந்த செல்வமே! சிவபெருமானே! இன்றுயான் உன்னைத் தொடர்ந்து உறுதியாக உன் திருவடிகளைப் பற்றிக் கொண்டேன். இனி நீ என்னை விட்டு எங்கே செல்ல முடியும்?*

*(சாலப் பரிந்து- மிகுதியான பரிவு காட்டி; ஊனினை உருக்கி- இவ்வுடம்பை இளைக்குமாறு செய்து; உலப்பு இலா- முடிவிலாத; சிக்கென- கெட்டியாக)*

முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட
அத்தனெனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே.

*"முத்திக்கு உரிய வழிகளை அறியும் திருவருள் வாய்ப்பு இல்லாத மூர்க்கர்களோடு கூடி வாழ்க்கையை வாழ முயல்கின்ற என்னை, அன்பு நெறியை அறிவித்துப் பழைய வினைகள் அனைத்தும் சிதறிப் போகும்படி என் சித்தத்தில் நிறைந்துள்ள ஆணவமாகிய*

மலத்தை அற்றுப் போகச் செய்து சிவமாக்கி ஆண்டுகொண்ட தந்தையாகிய சிவ பெருமான் எனக்கு அருளிய முறையை வேறு யார் பெற முடியும்?"

*(முக்தி நெறி-முக்தியடையும் வழி; பழவினைகள்- முன் பிறவிகளிற் செய்த நல்வினை; தீவினைகள்; பாறும் வண்ணம்- சிதறிப்போகும் வண்ணம்; சித்தமலம்- சித்தத்தில் சார்ந்துள்ள ஆணவம் (மனம், சித்தம், புத்தி, அகங்காரம் என்ற நான்கும் **அந்தக் கரணங்கள்** என்றும், ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்றும் **மும்மலங்கள்** என்றும் கூறப்பெறும்; அச்சோ- வியப்புக் குறி.)*

# திருவிசைப்பா

*திருவிசைப்பா, திருப்பல்லாண்டு என்ற இரண்டும் ஒன்பதாம் திருமுறையாக வகுக்கப் பெற்றுள்ளன. சேந்தனார், திருவாலியமுதனார், கருவூர்த்தேவர் போன்ற பலர் பாடியவை இவை. இப்பாடலும், அடுத்த பாடலும் கருவூர்த் தேவர் பாடியவை.*

பவளமால்வரையைப் பனிபடர்ந்தனையதோர்
படரொளிதரு திருநீறும்
குவளைமாமலர்க் கண்ணியும் கொன்றையும்
துன்றுபொற் குழல்திருச்சடையும்
திவளமாளிகை சூழ்தருதில்லையுள்
திருநடம்புரிகின்ற
தவளவண்ணனை நினைதொறுமென்மனம்
தழல்மெழுகொக்கின்றதே.

*"பவளமலை ஒன்றைப் பனி படர்ந்து சூழ்ந்திருப்பது போல் (இறைவனுடைய சிவந்த மேனியில்) திருநீறு பூசப்பெற்றும், குவளை மலர்களும் கொன்றை மலர்களும் நெருங்கி நிறைந்துள்ள பொன் போன்ற நிறமுடைய சடைக்கற்றையுடனும், வெள்ளிய சுண்ணத் தாலாய மாளிகைகள் சூழ்ந்த தில்லையம்பலத்தில் திருநடம் புரிகின்ற முத்து போன்ற வெண்மையான மேனியையுடைய சிவபெருமானை நினைக்குந்தோறும் என் மனம் நெருப்பிலிட்ட மெழுகு போல் உருகுகின்றது."*

*(பவளமால்வரை- பவள மலை; துன்று- நெருங்கிய; திவளம்- சுண்ணாம்பு தவளம்-முத்து)*



# திருப்பல்லாண்டு

குழலொலி யாழொலி கூத்தொலி ஏத்தொலி
எங்கும் குழாம்பெருகி
விழவொலி விண்ணளவும் சென்று விம்மி
மிகு திரு வாரூரின்
மழவிடை யாற்கு வழிவழி ஆளாய்
மணஞ்செய்குடிப் பிறந்த
பழவடி யாரொடுங் கூடிஎம் மானுக்கே
பல்லாண்டு கூறுதுமே

*"குழல், யாழ், கூத்து இவற்றால் ஏற்படும் ஒலியும், இறைவனை ஏத்தும் ஒலியும் எல்லாவிடங்களிலும் கூட்டமாகப் பெருகவும், விழா எடுக்கின்ற ஒலியும் சேர்ந்து தேவர் உலகத்தையும் சென்று அடைகின்ற சிறப்புமிக்க திருவாரூரில், இடப வாகனத்தை உடைய சிவபெருமானுக்குப் பரம்பரை பரம்பரையாகத் தொண்டு செய்கின்ற குடியிற் பிறந்த பழமையான அடியார்களுடன் சேர்ந்து இறைவனுக்குப் பல்லாண்டு கூறுவோமாக."*

# திருமந்திரம்

*திருமூல நாயனார் அருளிச் செய்த நூலே திருமந்திரம் எனப்படும். இவர் கயிலை மலையிலிருந்து வந்து மாயூரத்தை அடுத்துள்ள திருவாவடுதுறையில் வாழ்ந்தார். மூவாயிரம் பாடல்கள் கொண்டது திருமந்திரம்.*

அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே.

*"அன்பும் சிவமும் தனித்தனியான இரண்டு என்று கூறுபவர்கள் அறிவற்றவர்கள். அன்பே சிவமாவதை யாரும் அறியவில்லை; அன்பேதான் சிவமாயிற்று என்பதை அனைவரும் அறிந்து கொண்டபின் அவ்வாறு அறிந்தவர்கள் அன்பே சிவம் என்ற இரண்டற்ற நிலையில் அமர்ந்திருப்பார்கள்."*

செம்புபொன் னாகும் **சிவாய நம**என்னில்
செம்புபொன் னாகத் திரண்டது சிற்பரம்
செம்பு பொன்னாகும் ஸ்ரீயுங் க்ரீயுமென
செம்பொன் னான திருவம் பலமே.

*"**சிவாய நம** என்னும் திருவைந்தெழுத்தை ஓதினால் செம்பு பொன்னாகும்; அவ்வண்ணம் செம்பு*

பொன்னாகத் திரண்டு ஒன்றானதுதான் சிற்பரம்; **ஸ்ரீம் க்ரீம்** என்ற மந்திரங்களை ஓதச் செம்பு பொன்னாகும்; செம்பு பொன்னான நிலையே ஒரு அம்பலமாம்.

*(சிற்பரம்- ஆணவ மலம் நீங்கிச் சிவஞானம் பெற்று அதில் திளைத்து முற்றிய நிலையே சிற்பரம் எனப்படும்; **ஸ்ரீம் கிரீம்** என்ற மந்திரங்கள் சக்தி பேதங்கள் எனப்பெறும்; இவற்றைச் செபித்தால் ஆணவம் அற்றுப் போம். செம்பு என்பது களிம்புடன் உள்ளதுபோல ஆணவம் என்னும் களிம்புடன் கூடியது இவ்வான்மா)*



# பதினோராம் திருமுறை

**சே**ரமான் பெருமாள் நாயனார், காரைக்கால் அம்மையார் முதலிய அடியார்கள் பலரும் இயற்றிய அருள் நூல்கள் பதினோராம் திருமுறை என்ற பெயருடன் தொகுக்கப்பெற்றுள்ளன. இவற்றுள் பின்வரும் பாடலைப் பாடிய சேரமான் பெருமாள் நாயனார் சேர நாட்டில் மன்னராகத் திகழ்ந்தவர். நம்பியாரூரர் என்னும் சுந்தர மூர்த்திகளுடன் சம காலத்தில் வாழ்ந்து நண்பராகவும் இருந்து அவருடனேயே கயிலாயம் சென்றவர்.

இவருடைய பாடல்களுள் ஒன்றான **பொன் வண்ணத்தந்தாதியில்** உள்ள ஒரு பாடல் இதுவாகும். அந்தாதி என்பது ஒரு பாட்டின் ஈற்றடியிலுள்ள கடைசி சொல்லோ, சீரோ அன்றி அசையோ அடுத்த பாடலின் முதலடியாகத் தொடுப்பதேயாம். (அந்தம், ஆதியாக வருவது)

*இப்பாடல் சிவபெருமானுடைய திருமேனியைப் பல உவமைகள் மூலம் எடுத்து விளக்குகிறது.*

விரிகின்ற ஞாயிறு போன்றது
  மேனி.அஞ் ஞாயிறு சூழ்ந்து
எரிகின்ற வெங்கதிர் ஒத்தது
  செஞ்சடை. அச்சடைக்கீழ்ச்
சரிகின்ற கார்இருள் போன்றது
  கண்டம். அக்கார் இருட்கீழ்ப்
புரிகின்ற வெண்முகில் போன்றுள்ள
  தால்எந்தை ஒண்பொடியே.

*“காலையில் புறப்பட்டு மேலேறும் சூரியனைப் போன்று சிவந்த நிறமுடையது இறைவனுடைய மேனி; அந்தச் சூரியனைச் சூழ்ந்து எரிகின்ற சிவந்த கிரணங்களைப் போன்றுள்ளது அவனுடைய சிவந்த சடைக்கற்றை; அச்சடையின் கீழ் உள்ள நீல நிறம் பொருந்திய கண்டம் (நீலகண்டம்) செறிந்த இருள் போன்றது; அந்தக் கரிய இருளின் மேல் படர்ந்துள்ள வெண்மையான மேகக் கூட்டங்கள் போன்றுள்ளது இறைவன் மேனியில் பூசப்பெற்றுள்ள திருநீறு.”*

*(விரிகின்ற ஞாயிறு- காலையில் தோன்றும் சூரியன்; எரிகின்ற வெங்கதிர்- தீக் கொழுந்துடன் கூடிய கிரணம்; கண்டன்-இறைவனுடைய கழுத்து ஆலகால விடம் தங்கியுள்ளமையால் நீலகண்டம் எனப் பெயர்பெறும்; வெண்முகில்- வெண் மேகம்; ஒண் பொடி- ஒளி பொருந்திய திருநீறு (விபூதி)*

# பெரியபுராணம்

பன்னிரண்டாம் நூற்றாண்டில் சென்னையை அடுத்துள்ள குன்றத்தூரில் தோன்றியவர் அருண்மொழித்தேவர் என்ற பெயருடைய சேக்கிழார். இவர் இரண்டாம் குலோத்துங்கன் என்னும் சோழப் பேரரசனிடம் அமைச்சராய் இருந்தவர். பின்னர் மண்ணாளும் செல்வத்தை வெறுத்து ஒதுக்கிவிட்டு இறைவனுடைய அடியார்கள் புகழைப் பாடும் திருப்பணியை மேற்கொண்டார்.

நம்பியாரூரர் முதல் சேரமான் பெருமாள் நாயனார் ஈறாக உள்ள அறுபத்து மூன்று சிவனடியார்களின் வரலாற்றைத் **திருத்தொண்டர் புராணம்** என்ற பெயரில் பாடி அருளினார்.

நம்பியாரூரராகிய சுந்தரமூர்த்திகள் வரலாற்றில் வரும் பாடலாகும் இது. நம்பியாரூரார் சிதம்பரம் சென்று ஆடவல்ல பெருமானை எவ்வாறு கும்பிட்டார் என்பதை இப்பாடல் விவரிக்கிறது.

ஐந்துபேரறிவும் கண்ணே கொள்ள
அளப்பரும் கரணங்கள் நான்கும்
சிந்தையே ஆகக் குணம் ஒரு மூன்றும்
திருந்து சாத்து விகமே ஆக
இந்துவாழ் சடையான் ஆடும் ஆனந்த எல்லையில்
தனிப்பெரும் கூத்தின்

வந்தபே ரின்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியில் மலர்ந்தார்.

*"ஐந்து பொறிகளுடனும் தனித்தனி இயங்குகின்ற அறிவு கண்ணின் வழியே மட்டும் தொழிற்படவும், அளத்தற்கரிய அந்தக் கரணங்கள் நான்கும் சிந்தை வழிச் செல்லவும், மூன்று குணங்களும் அடங்கிச் சத்துவ குணமே மேலோங்கவும், சந்திரனைத் தலையில் சூடிய பெருமான் ஆடும் ஆனந்தக் கூத்து எனப்பெறும் முடிவில்லாத ஒப்பற்ற பெருங்கூத்தைக் காண்பதால் உண்டான பேரின்பமாகிய வெள்ளத்துள் மூழ்கித் திளைத்து மாறுபாடில்லாத மகிழ்ச்சியால் உளம் மலர்ந்தார்."*

*(ஐந்து பேரறிவு- ஒலி, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்து புலன்களும், அவை வெளிப்படக் காரணமாக உள்ள வாய், கண், மெய், செவி மூக்கு என்ற ஐந்து பொறிகளும்; **கரணங்கள் நான்கு**- மனம், சித்தம், புத்தி, அகங்காரம்; **குணம் மூன்று**- தாமஸ; ராஜஸ, சத்துவம், இந்து- சந்திரன்)*





# திருச்செந்தூர் முருகன் பிள்ளைத் தமிழ்

**யா**ரைப்பற்றிப் பாடப்படுகின்றதோ அவர்களைக் குழந்தையாகக் கருதிக் கொண்டு, அக்குழந்தை செய்த, செய்யக்கூடிய செயல்களை எல்லாம் கற்பனை செய்து பாடுவதே பிள்ளைத்தமிழ் எனப்படும். காப்புப் பருவம் முதல் பத்துப் பருவங்களை உடையது இது. ஆண்பாற் பிள்ளைத் தமிழ் என்றும், பெண்பாற் பிள்ளைத்தமிழ் என்றும் இருவகைப்படும். கடைசி மூன்று பருவங்கள் மட்டுமே இரண்டிலும் மாறுபடும்.

திருச்செந்தூர் முருகன் பிள்ளைத்தமிழ் என்ற நூல் பகழிக்கூத்தர் என்பவரால் இயற்றப்பெற்றது இங்குள்ள பாடல் "சிற்றில் பருவம்" எனக் கூறப்பெறும் பருவத்தில்

உள்ள பாடலாரும். இன்றும் இளஞ் சிறுமிகள் மணலில் சிறு வீடு கட்டிக் கூட்டாஞ்சோறு ஆக்கி விளையாடு வதை நாம் அறிவோம். அவ்வாறு விளையாடும் பொழுது இளஞ்சிறுவன் அந்த மணல் வீட்டைத் தன் காலால் எற்றி அழித்து விடுவதையும் காண்கிறோம்.

"பொய்யா வளமை தரும்பெருமைப்
பொருநைத் துறையின் நீராட்டிப்
பூட்டுங் கலன்கள் வகைவகையே
பூட்டி எடுத்து முலைஊட்டி

மெய்யா லணைத்து மறுகுதனில்
விட்டா ரவரைவெ றாமனலுனை
வெறுக்க வேறு கடனுமுண்டே
விரும்பிப் பரலைக் கொழித்தெடுத்துக்

கையா லிழைத்த சிற்றிலைநின்
காலா லழிக்கை கடனலகாண்
காப்பான் அழிக்கத் தொடங்கில் எங்கள்
கவலை எவரோடு இனிஉரைப்போம்

ஐயா உனது வழியடிமை
அடியேம் சிற்றில் அழியேலே
அலைமுத் தெறியும் திருச்செந்தூர்
அரசே சிற்றில் அழியேலே."

"என்றும் தப்பாத வளமையைச் செய்யும் பெருமை யுடைய தாம்பிரவருணித் துறையில், உனக்கு நீராட்டி, அணியத்தக்க அணிகள் அனைத்தையும் முறையாக அணிவித்து, பாலூட்டி, உடம்போடு சேர்த்து அணைத்து, முத்தம் தந்து, தெருவில் உன்னை விளை யாட விட்டவரைக் குறை கூறாமல், உன்னை வெறுத்துக் கொள்வதால் என்ன பயன் விளையப்போகிறது? (இளம்

சிறுமிகளாகிய நாங்கள்) விருப்பத்துடன் பரற் கற்களைக் கொழித்து எடுத்து சுவர் முதலியன வைத்துக் கையால் கட்டிய எங்கள் சிறு வீட்டை உன்னுடைய காலால் அழிப்பது முறையன்று கண்டாய். காக்கும் கடமையுடைய நீயே அழிக்கத் தொடங்கி விட்டால் எங்கள் கவலையை இனி யாரிடம் முறையிட முடியும்? ஐயா! பரம்பரை பரம்பரையாக உனக்கு அடிமைப் பட்டுள்ளோம். அப்படிப்பட்ட அடியார்களாகிய எங்கள் சிறு வீட்டை அழிக்க வேண்டா! கடலலைகள் முத்துச் சிதறும் திருச்செந்தூருக்குத் தலைவா! அடியேம் சிறு வீட்டை அழிக்காதே."

*(பொய்யா- மாறாத; பொருநை- தாம்பிரவருணி; கலன்கள்- நகைகள்; மறுகு- தெரு; பரல்- பரற் கற்கள்; சிற்றில்- சிறு வீடு; வழியடிமை- பரம்பரையான அடியவர்கள்)*

# மீனாட்சி அம்மை பிள்ளைத் தமிழ்

*மதுரையில் எழுந்தருளியுள்ள மீனாட்சி அம்மையைக் குழந்தையாகக் கற்பனை செய்து குமரகுருபர அடிகளார் பாடியதாகும் மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்.*

காலத் தொடுகற் பனைகடந்த
கருவூ லத்துப் பழம்பாடல்
கலைமாச் செல்வார் தேடிவைத்த
கடவுள் மணியே உயிரால

வாலத் துணர்வு நீர்பாய்ச்சி
வளர்ப்பார்க் கொளிபூத் தளிபழுத்த
மலர்க்கற் பகமே எழுதாச் சொல்
மழலை ததும்பு பசுங்குதலை

சோலைக் கிளியே உயிர்த்துணையாம்
தோன்றாத் துணைக்கோர் துணையாகித்
துவாத சாந்தப் பெருவெளியில்
துரியம் கடந்த பரநாத

மூலத் தலத்து முளைத்தமுழு
முதலே முத்தந் தருகவே
முக்கட் சுடர்க்கு விருந்திடு மும்
முலையாய் முத்தம் தருகவே.

*"காலத்தையும் கற்பனையையும் கடந்து நிற்கின்ற பழம் பாடலாகிய வேதத்தின் கருவூலத்துக் கலைகளைக் கரைகண்ட செல்வர்கள் தேடி வைத்த கடவுளே! உயிராகிய பாத்தியில் உணர்வாகிய நீரைப் பாய்ச்சி வளர்ப்பவர்கட்கு ஒளிபூத்து அருளைப் பழமாகத் தரும் மலரோடு கூடிய கற்பக மரமே! எழுத முடியாத மழலைச் சொற்கள் ததும்பும் பசிய குதலை பேசும், சோலையில் வாழும் கிளியே! அனைத்துயிர்கட்கும் உயிர்க்குயிராயும் தோன்றாத் துணையாயும் உள்ள இறைவனுக்கோர் துணையாகி நின்று, துவாதசாந்தம் என்று கூறப்பெறும் பெரு வெளியில் துரியாதீத பரநாத மூலத்தலத்தில் விளையாடும் முழு முதலே! முத்தந் தருவாயாக! இறைவனுடைய மூன்று கண்கட்கும் விருந்தாய் அமைந்தவளே! முத்தந் தருவாயாக."*

*(கருவூலம்- பொக்கிஷம்; பழம்பாடல்- வேதம்; கலைமாச் செல்வர்- ஞானிகள்; ஆலவாலத்து- பயிர்செய்வதற்குரிய பாத்தி; குதலை- மழலையினும் முற்பட்ட சொல்)*

*துவாதசாந்தப் பெருவெளி என்பது தலையில் உச்சிக்கு மேல் 12 விரல்கிடை தாண்டி இருக்கும் இடம் இதுவே இறைவன் உறைகின்ற இடம் என்பர்.*

*(துவா-துவி- தோ இரண்டு; தசம்-பத்து; 2+10=12 அந்தம்-முடிவு)*

*துரியாதீதம்- ஆன்மா மூலாதாரத்தில் தங்கி அவிச்சையை மட்டும் அங்கீகரிக்கும் ஐந்தாவது நிலை.*



# பண்களின் சுர அமைப்பும் தாளக் குறிப்பும்

, ஒரு அட்சர காலம்

; இரண்டு அட்சர காலம்

புள்ளி சுரத்தின் மேலுள்ள புள்ளி தார ஸ்தாயியையும், சுரத்தின் கீழுள்ள புள்ளி மந்திர ஸ்தாயியையும் குறிக்கும்.

ஒற்றைப் படுக்கை கோடு இரண்டாம் காலத்தைக் குறிக்கும்.

இரட்டைப் படுக்கைக் கோடு மூன்றாம் காலத்தைக் குறிக்கும்.

| தாளத்தின் இடையில் வரும் அங்கத்தைக் குறிக்கும்.

|| தாள வட்டத்தின் (ஆவர்த்தத்தின்) இறுதியைக் குறிக்கும்.

ஒவ்வொரு பண்ணிற்கும் அதற்கு ஏறக்குறைய ஒப்புமை உடைய இராகமும், அதன் ஆரோகண, அவரோகணங்களும், தலைப்பில் கொடுக்கப்பட்டுள்ளன.

தோடுடையசெவி யன்விடைஏறியோர் தூவெண்மதிசூடி
காடுடையசுட லைப்பொடிபூசியென் உள்ளங்கவர்கள்வன்
ஏடுடையமல ரான்முனைநாள்பணிந் தேத்தவருள்செய்த
பீடுடையபிர மாபுரமேவிய பெம்மானிவனன்றே.

**பண்: நட்டபாடை – தாளம்: ரூபகம்**

## திருஞானசம்பந்தர் — கம்பீரநாட்டை

ஆரோ: ஸ க² ம¹ ப நி² ஸ்
அவ: ஸ் நி² ப ம¹ க² ஸ

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| கா, ம | \| | பாபா ;பாம | \|\| | பா, ம | \| | பா மா, க ஸா | \|\| |
| தோடு | | டைய செவி | | யன் வி | | டை ஏ றி யோர் | |
| ஸா கா | \| | ;கம பாமா | \|\| | பா; | \| | ;,மகமகஸ | \|\| |
| தூவெண் | | மதிசூ | | டி | | | |
| ” | \| | | \|\| | கமபநி | \| | ஸ்நிபமபமகஸ | |
| பா, மக | \| | மா–பா, ஸ்நீ | \|\| | ஸ்ா, ஸ் | \| | ஸ்ா நிஸ்ாதி பா | \|\| |
| கா டு | | டைய சுட | | லைப் பொ | | டி பூ சி யென் | |
| பதிநிஸ் | \| | ,நி ப ப மா; | \|\| | கமபதி | \| | ஸ்நிபம் க கஸ | \|\| |
| உள்ளம் | | கவர்கள் | | வன் | | | |

*பின் இரண்டு அடிகளையும் இப்படியே பாடுக.*

சிறையாரு மடக்கிளியே இங்கேவா தேனோடுபால்
முறையாலே உணத்தருவன் மொய்பவளத் தொடுதரளம்
துறையாரும் கடல்தோணி புரத்தீசன் துளங்கும்இளம்
பிறையாளன் திருநாமம் எனக்கொருகால் பேசாயே.

**பண்: பழந்தக்க ராகம் – தாளம்: திரிபுடை**

## திருஞானசம்பந்தர் — சுத்தசாவேரி

ஆரோ: ஸ ரி$^2$ ம$^1$ ப த$^2$ ஸ்
அவ: ஸ் த$^2$ ப ம$^1$ ரி$^2$ ஸ

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1. | ,ப தரிஸ்ஸ் | \| | தா, ப | \| | பா; | \|\| |
| | சி றை | | யா | | ரும் | |
| | , த த பா ம | \| | பா ; | \| | பா; | \|\| |
| | மடக் கி | | ளி | | யே | |
| 2. | பதஸ்தபா–தா, ரில்ஸ் | \| | தா, ப | \| | பா; | \|\| |
| | சி றை | | யா | | ரும் | |
| | , த த பா ம | \| | பா மபதா | \| | தபபமமதபம | \| |
| | மடக் கி | | ளி | | யே | |
| | பா,–மா, | \|\| | பத தஸ் ஸ் ரீஸ் | \| | ஸ்ததப | \|\| |
| | இங் | | கே | | வா | |
| | , ப மதபம ரிமரிஸ | \|\| | ரிமா ரி மபாம | \| | பததப பதஸ்ா | \|\| |
| | தே னொ டு | | பால் | | | |
| | பதஸ் தபம பதா | \|\| | ஸ்ா; | \| | ஸ்ா; | \|\| |
| | பால் முறை | | யா | | லே | |

| | | |
|---|---|---|
| ; ; ; \|\| | ; ; \| | ; ஸ் த ரிஸ் \|\| |
| ஸ்தஸ்தபம–பதா \|\| | ஸ்ா; \| | ஸ்ரிம்ரிஸ்த \|\| |
| னொடுபால் முறை | யா | |
| ஸ்ா ; ; \|\| | , த ஸ் ரிம்ரி \| | ஸ்ா ஸ்ததரிஸ்ா \|\| |
| லே | இங்கே | வா தே னொ |
| ஸ்தா, ப – பதா \|\| | ஸ்ா; \| | ஸ்–ஸ்ரிம \|\| |
| டு பா ல் முறை | யா | லே சிறையா |
| , ம ரி ம ப த \|\| | த–தஸ் ரிம்ரி \| | ஸ்ா ஸ்ததரிஸ்ா \|\| |
| ரும்மடக்கிளி | யே இங்கே | வா தே னோ |
| ஸ்ாதா, ப – பதா \|\| | ஸ்ா; \| | ஸ்ரிம்ரி ஸ்த் \|\| |
| டு பா ல் முறை | யா | லே |
| , த ஸ்ாரிம் ரி \|\| | , தஸ்ா \| | ; ஸ்த ரிஸ் \|\| |
| உண்ணத் | தரு | வன் |
| ஸ்தஸ்தபம–பதா \|\| | ஸ்ா; \| | ஸ்ரிம்ரி ஸ்த் \|\| |
| முறை | யா | லே |
| , த ஸ்ாரிம்ரீ \|\| | ரிம் ரிரிஸ் ரிஸ்ஸ் \| | தஸ்தத பததரி \|\| |
| உண்ணத்த | ரு | வன் |
| ஸ்தஸ்தபம – பா ப \|\| | பதத ஸ் ஸ்ரீஸ் \| | ஸ்ததப \|\| |
| மொய்ப | வ | ளத் |
| ,பமமதபமரிமரிஸ \|\| | ரிபமரி மதபம \| | பஸ்தத பதஸ்ா \|\| |
| தொடு த | ர | ளம் |
| பதஸ்தபம– | | |

*பின் இரண்டு அடிகளையும் இப்படியே பாடுக.*

வம்பார்குன்றம் நீடுயர்சாரல் வளர்வேங்கைக்
கொம்பார்சோலைக் கோலவண்டியாழ்செய் குற்றாலம்
அம்பால்நெய்யோ டாடலமர்ந்தான் அலர்கொன்றை
நம்பான்மேய நன்னகர்போலும் நமரங்காள்.

**பண்: பழந்தக்க ராகம் – தாளம்: திரிபுடை**

## திருஞானசம்பந்தர் ஹரிகாம்போதி

ஆரோ: ஸ ரி² க² ம¹ ப த² நி¹ ஸ்
அவ: ஸ் நி¹ த² ப ம¹ க² ரி² ஸ

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ,ப மா கம | பா ; | பா; | ‖ ,நித தஸ்நித பா | மபமா பதபா | தநி நிதபம |
| வம்பார் | குன் | றம் | நீ டு யர் | சா | ரல் |
| கம–பபாநித பமகம | ” | ” | ‖ ” | ” | தநி நிததிப |
| வம் பார் | ” | ” | ” | ” | ரல் |
| ,ம ப மா, | கம பா மா | தா பதரிஸ் | ‖ நித–ப பாநிதபமகம | பாப ததநி | நிஸ் நிஸ்ரிஸ் நிததிப |
| வ ளர் வேங் | கை | | வம் பார் | குன்றம் | |
| , மப மா, | கமபாதப | பாமப | தாநிததா பதரிஸ் ‖ நித– | | |
| வளர் வேங் | கை | | | | |
| தாநிகதா | பதரிஸ் | நித– | ‖ | | |
| , மப மா | மா நித | தாஸ்நிதநி | ‖ | | |
| வளர் வேங் | கை | | | | |
| ,பதநி நிததா | , நீத | ;,நித | ‖ பம– | | |
| கொம்பார் | சோலை | | | | |
| , பதநி நிததா | ,தநிஸ்நி தநி | ஸ்நி தநிஸ்நிதஸ் | ‖ நித | | |

கொம் பார் சோ லை
, பதநி நிததா |,ஸ்நிதநி ஸ்நி |நித- ||
கொம் பார் சோ லை
, பதநி நிததா |, ரிஸ்ா |; ஸ்ஸ்நித ||
கொம்பார் சோலை
ப-காம பப |கமப |ஸ்ா-ஸ்ஸ்நித ||
கோலவண்டு யாழ்செய்
ப-காம பப |,கமப |ஸ்ா-ஸ்ஸ்நித ||
கோலவண்டு யாழ் செய்
பா-பாபபமமகரிஸா |ஸரிகமபாதநி |ஸ்ாஸ்நி ரிஸ்நித ||
குற்றா லம்
பம
ப த நிஸ்ா |, தநிஸ்ரிக்ம் |க்க்ரிஸ்ஸ்நித ||
கொம்பார் சோ லை
பம ப கம பப |,கமப |ஸ்ா ஸ்ஸ்நித ||
கோல வண்டு யாழ்செய்
பா-பாபபமககரிஸா |ரிபபமமா |; ; ||
குற்றா லம்

*பின் இரண்டு அடிகளையும் இப்படியே பாடுக.*

சேவுயருந் திண்கொடியான் திருவடியே சரணென்று சிறந்த அன்பால்
நாவியலும் மங்கையொடு நான்முகன் தான் வழிபட்ட நலங்கொள் கோயில்
வாவிதொறும் வண்கமலம் முகங்காட்டச் செங்குமுதம் வாய்கள் காட்டக்
காவியிருங் கருங்குவளை கருநெய்தல் கண் காட்டும் கழுமலமே.

**பண்: மேகராகக் குறிஞ்சி – தாளம்: திரிபுட**

**திருஞானசம்பந்தர்** **நீலாம்பரி**

ஆரோ: ஸ ரி² க² ம¹ ப நி² ஸ
அவ: ஸ் நி² ப ம¹ க² ரி² க² ஸ

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ; , ஸா ஸரி | கா, ம பா | பபமக மா | , கமாபதபம | காமக | ரீ; |
| சேவு | ய | ரும் | திண்கொ | டி | யாண் |
| ரிகமகரிக—ஸஸஸரி | கா, ம பா | பபமகமா | ,கமாபதபம | காமக | ரீ; |
| திருவ | டி | யே | சரண் | என் | று |
| ரிகமகரிக—ஸ்ாஸா | ஸரிகம பாதப பம | மாரீரப | பா ; ; | மா ரிகமப | மகரிகமா மக |
| சிறந் | த | அன் | பால் | | |
| ;ஸ—தபமகமா | பா; | தபமா | ,பம பஸ் | ஸ்நி தநிஸ்ா | ஸ்நீப பா |
| நாவி | ய | லும் | மங்கை | யோ | டு |
| பபமகமா காமா | பாதநிதநிஸ்ா | ததப | ,கமாபதபம | காமக | ரீ; |
| நான்மு | கன் | தான் | வழி | பட் | ட |
| ரிகமகரிக—ஸஸா | ஸரிகமபாதபபம | மாரீரிப | பா, மா | , மகரிகமப | மகரிகமா கா |
| நலம் | கொள் | கோ | யில் | | |
| ஸா ; ; | | | | | |

*பின் இரண்டு அடிகளையும் இப்படியே பாடுக.*

அவ்வினைக் கிவ்வினை யாமென்று சொல்லும் அஃதறிவீர்
உய்வினை நாடா திருப்பதும் உந்தமக் கூனமன்றே
கைவினை செய்தெம் பிரான்கழல் போற்றுது நாமடியோம்
செய்வினை வந்தெமைத் தீண்டப்பெறா; திருநீலகண்டம்.

**பண்: வியாழக்குறிஞ்சி – தாளம்: ஆதி**

**திருஞானசம்பந்தர்** **சௌராஷ்டிரம்**

ஆரோ: ஸ ரி$^1$ க$^2$ ம$^1$ ப தா$^2$ நி$^2$ ஸ்
அவ: ஸ் நி$^2$ த$^2$ நி$^1$ த$^2$ ப ம$^1$ க$^2$ ரி$^1$ ஸ

| | | | |
|---|---|---|---|
| ;,ஸ்,ஸ்ஸாஸ்ா,ஸ் நிததா | த நீ த பா பம | பா நி த ப பம கம | ‖ |
| அவ்வினைக்குஇவ்வினை | யா மென் | று சொல் லும் | |
| கரீ–ம ,கமா தநீ*த பா; | ; ; ; ; | ; ; ; ; | ‖ |
| அஃதறி வீர் | | | |
| ;, ப தபமா தநீஸ் ;ரீ | ; ஸ் ஸ் ,ரிஸ்ா | ஸ்ா, நி தா த நி* | ‖ |
| உய் வினை நாடா து | இருப் பதும் | உன் தமக் கு | |
| த பா–ம, கமா தா,நி ஸ்ா,நி | த நீ* த பா ம ப | <u>தா</u> <u>நித</u> <u>பாதப</u> <u>மாபம</u> <u>கம</u> | ‖ |
| <u>ஊ</u> னமன் றே | | | |
| ரீ,– | | | |

*பின் இரண்டு அடிகளையும் இப்படியே பாடுக.*

என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே இருங்கடல் வையத்து
முன்னைநீபுரி நல்வினைப் பயனிடை முழுமணித் தரளங்கள்
மன்னு காவிரி சூழ்திரு வலஞ்சுழி வாணனை வாயாரப்
பன்னி ஆதரித் தேத்தியும் பாடியும் வழிபடு மதனாலே

**பண்: நட்டராகம் – தாளம் : ஆதி**

## திருஞானசம்பந்தர் — பந்துவராளி

ஆரோ: ஸரி$^{1}$ க$^{2}$ ம$^{2}$ பத$^{2}$ நி$^{2}$ ஸ்
அவ: ஸநி$^{2}$ த$^{1}$ பம$^{2}$ க$^{2}$ ரி$^{1}$ ஸ

1. ; ஸா; ஸ்தி தநிதித நி தபா | ;, ப , தபா | பாபம தபதா |
என் ன புண் ணி யம் செய் தனை நெஞ்ச மே
2. , ம–ஸ்ா; ரீ, க் ரிஸ்ஸ்ா, நி த நி நித | பத நீரிஸ் நிதபா | பாபம மபதப தா|
என் ன புண் ணி யம் செய் தனை நெஞ்ச மே
1. ;, பத ,பதம; ஸ்ாரிஸ் ஸ்தநீ | ஸ்நிக்ரி ஸ்நி ததி| நித நித பமகம |
இருங் கடல் வை யத் | ஸ்ா; ; ; | ; ; ; ;
2. பதநி– ” து
1. ; ஸ்ா நி தபமா, ;,த ,நிஸ்ா | ;,ஸ் க்ரிஸ்ா | ஸ்ா ஸ்த நீ ஸ்ா
முன் ணம் நீ புரி நல் வினைப் ப ய னொடு
2. ” | ;ஸ்ரீ ,க்கா | க்ரி மக் க்ரிஸ்ா
;நிஸ் ,நிஸ்ா தாநீ தாபம | நல் வினைப் ப ய னொடு
முழு மணித் தர ளம்
பதநி–

*பின் இரண்டு அடிகளையும் இப்படியே பாடுக.*

தொண்டரஞ்சு களிறும் மடக்கிச் சுரும்பார்மலர்
இண்டைகட்டி வழிபாடு செய்யும் இடமென்பரால்
வண்டுபாட மயிலால மான்கன்று துள்ளவரிக்
கெண்டைபாயச் சுனைநீல மொட்டலரும் கேதாரமே.

**பண்: செவ்வழி – தாளம் ; திரிபுடை**

**திருஞானசம்பந்தர்** **யதுகுலகாம்போதி**

ஆரோ: ஸ ரி² ம¹ பத² ஸ்
அவ:ஸ் நி¹ த² பம¹ க² ரி² ஸ

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| | ;, ஸ ஸா | ரீபம | மா; | கம பபா | பா; | பா; |
| | தொண்ட | ரஞ் | சு | களி | றும் | |
| | பபமகரிக – ” | ” | ” | ” | பதநித பா | பதநித பா |
| | பதநிததப–மககா,ஸ | ஸரிரிமமப மபதப | பமமா மா | , கமபபா | மமபா | தஸ்தப |
| | தொண்ட | ரஞ் | சு | களி | றும் | |
| 1. | பாததபம–பதப | தா; | ; , த | தா, தநி தப | மபமா பதபா | தநிதப |
| | அடக் | கி | சு | ரும் பார் | ம | லர் |
| 2. | பதநிதபம– பதப | தா ஸ்ா | ஸ்நித – த | தா, தநிதப | மகமபபமபத | பதநித பதஸ்ா |
| | அடக் | கி | சு | ரும் பாா | ம | லா |
| | ஸ்ஸ்நிதபம பதா | ஸ்ா; | ஸ்ா; | ,தஸ் ஸ்நி ஸ்ாரிஸ் நிஸ் | ஸ்நிதத | ,ஸ் நிதபா |
| | இண்டை | கட் | டி | வ ழி | பா | டு |
| 1. | மப தப – ப பமமா | கா,ம பா | பா பாதஸ் | | | |
| | செய்யும் | இ | டம் வழி | | | |
| 2. | தாப – மமா | மகாம பா | மப தா, | பா, த ஸ்–மா, | பாதஸ் தப | பமமத பமகா |
| | பாடு செய்யும் | இ | டம் | என் ப | ரால் | |
| | ரிகமகரிக– | | | | | |

*பின் இரண்டு அடிகளையும் இப்படியே பாடுக.*

இடரினுந் தளரினும் எனதுறுநோய்
தொடரினும் உனகழல் தொழதெழுவேன்
கடல்தனி லமுதொடு கலந்தநஞ்சை
மிடறினி லடக்கிய வேதியனே
இதுவோஎமை யாளுமா றீவதொன்றுஎமக் கில்லையேல்
அதுவோ உனதின்னரு ளாவடுதுறை யரனே.

**பண் : காந்தார பஞ்சமம் – தாளம்; ஆதி (2 களை)**

## திருஞானசம்பந்தர் — கேதாரகௌளை

ஆரோ:ஸ ரி$^{2}$ ம$^{1}$ ப நி$^{1}$ ஸ்
அவ:ஸ் நி$^{1}$ த$^{2}$ ப ம$^{1}$ க$^{2}$ ரி$^{2}$ ஸ

| | | |
|---|---|---|
| ; ; ; பஸ் ஸ்நிநித ததிபா | பா; பாதஸ் தப | பபமக ரீ; |
| இட ரி னும் | த ள | ரி னும் |
| ரீ ரீகம கா,ம கரிஸா–ஸரி மா; கா,ம பா | பஸ்ஸ்நி நீ தா, நி ஸ் | ஸ்நிநீ தநி தநிஸ்ா |
| எனது று | நோ | ய் |
| ஸ்நிரிஸ் நிதஸ்தி தப– பநி மபா நீ ஸ்ா; | ஸ்ா ; ஸ்நிரீ | ஸ்நிதீ ; தநி தநிஸ்ா |
| தொடரி னும் | உ ன | க ழல் |
| ஸ்நிரிஸ்நிதஸ்நி தப– பஸ் ஸ்நி நித ததிபா | ரீமா பாநீ | நீ தா நிஸ் ஸ்நிதநி |
| தொழுதெ ழு | வேன் | |
| ஸ்ா; ; பஸ் ஸ்நிநித தநிபா | பா; பாதஸ் தப | பபமக ரீ; |
| தொட ரி னும் | உ ன | க ழல் |

ரீ ரீகம கா,ம கரிஸா – ஸரி மா; கா,ம பா | பஸ்ஸ்நி நீ தா,நி ஸ்ா | ஸ்நிதீ தநி ததிஸ்ா
தொழுதெ ழு வேன்

ஸ்நிரிஸ் நிதஸ்நி தப– நிம பா நிஸ் ரீ; | ரீ; ரீ; | ரீ,ஸ் ரிக்ா ரி ||
கடல்த னில் அ மு தொ டு

; ; ; ரீரிம் க்ரிஸ்ா ; ; ; | ஸ்ா; ஸ்நிரீ | ஸ்நீநீ; தநி தநிஸ்ா ||
கலந் த நஞ் சை

ஸ்நிரிஸ் நிதஸ்நி தப – நிம பா நீ ஸ்ா; | ஸ்ா ; ஸ்திரீ | ஸ்நிநீ; தநி ததிஸ்ா ||
மிட றி னில் அ டக் கி ய

ஸ்நிரிஸ்நிதஸ்நி தப – பஸ் ஸ்நிதித ததிபா | ரீ மா பாநீ | நீதா நிஸ் ஸ்நிதநி ||
வே தி ய னே

ஸ்ா ; ; ப நி ஸ்ா; ; ஸ்ப | ப நி ஸ் ரி ரி ம் ரி ஸ் | ஸ்ஸ்நி த நிஸ் ஸ்நிததி ||
இது வோ எமை யாளுமா றீவதொன் றெமக்கிலை யேல்

ஸ்ா ; ; – ப ரி ரீ; ; ரிஸ் | ஸ்நி நி த தபபம | ம க ரி ஸ ரி ம ப நி ||
அதுவோ உன தின் னருள் ஆவடு துறையர னே

ஸ்ா; ; ; ; ; ; ; | ; ; ; ; | ; ; ; ; ||

மண்ணில்நல் லவண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில்நல் லகதிக்கி யாதுமோர் குறைவிலைக்
கண்ணில்நல் லஃதுறுங் கழுமல வளநகர்ப்
பெண்ணில்நல் லாளொடும் பெருந்தகை யிருந்ததே

**பண் : கொல்லி – தாளம் : சாபு**

## திருஞானசம்பந்தர் — நவரோஜா

ஆரோ: ப த² நி² ஸ ரி² க¹ ம¹ ப
அவ: ப ம¹ க² ரி² ஸ நி² த² ப

| | | | |
|---|---|---|---|
| 1. ,ப ம | காமக ரீரிம | கரிஸா ஸ | ஸநிதத |
| மண்ணில் | நல் | ல வண் | ணம் |
| ப – ஸஸ | ஸா ; | ரி கம | கா ; |
| வாழ | லாம் | வை க | லும் |
| 2. ,ப ம | காமக ரீரிம | கரிஸா ஸ | ஸரிகமகரிஸநி |
| மண்ணில் | நல் | ல வண் | ணம் |
| தப – ஸஸ | ரிகமககரிஸநி | ஸாப | மா; |
| வாழ | லாம் | வைக | லும் |
| ,க ம | பமபா | பா ம | பா – கமபம |
| எண் ணில் | நல் | ல க | திக் கு |
| கரி–க ம | பமபா | ரிகம | கரி ரிஸ |
| எண் ணில் | நல் | ல க | தி க்கு |
| ,ஸஸ | ஸரிஸரி | கபம | கா கமபம |
| யாது | மோர் | குறைவி | லை |
| ரீ, | ; ; | | |

*பின் இரண்டு அடிகளையும் இப்படியே பாடுக.*

காத லாகிக் கசிந்துகண் ணீர்மல்கி
ஓது வார்தமை நன்னெறிக்கு உய்ப்பது
வேத நான்கினும் மெய்ப்பொரு ளாவது
நாதன் நாம நமச்சி வாயவே.

**பண் : கௌசிகம் – தாளம் : ஆதி (2 களை)**

## திருஞானசம்பந்தர்

## பைரவி

ஆரோ: ஸ ரி² க¹ ம¹ ப த² நி¹ ஸ
அவ: ஸ் நி¹ த¹ ப ம¹ க¹ ரி² ஸ

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ; ; | ;ரீ ஸ்ா; | ஸ்ா,த நி ஸ்ரீ | ஸ்ா; | நிததா | பா; ; ; | \|\| |
| | கா த | | லா | | கி | |
| மபதநி | ஸ்ாரிஸ்– | ரி ம்க்ரி ஸ்ா ” | | ” | ” | \|\| |
| | | கா த | | | | |
| பதநிபதப–மா | | பமா,; மாபம கரிக | மபா | பமபத* | நித*நீ நிததப | \|\| |
| | க | சிந் து | கண் | | ணீர்ம ல்கி | |
| பதநிபதம–தா பா; | | பமபத* | நீ; | தா*,நி ஸ்ரிஸ்ா | ஸ்நிதித தபா, | |
| | ஒ து | | வார் | | தம் மை | |
| பதநிபதம்–மா பமா, | | மாபம கரிக | பா,ம | பா,த நித | தா; பா; | \|\| |
| | நன் னெ | றிக் | குய்ப் | | ப து | |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| பதநிபதம—தா பா; | | பாநித பாதம\| | | பா,த*நித* | தா*,நிஸா | \| ஸாத* நிஸா; | \|\| |
| | வேதம் | | | நான் | | கி னும் | |
| லாரிஸ்நீதா* | | நிஸ்ரீ; | க்ம்க்ரி | \| ஸா; | த*நிஸ்ரி | \| ஸ்நிதித தபபா | \|\| |
| | | மெய்ப்பொ | ரு | ளா | | வ து | |
| பதநிபதப | தா*,நி | ஸா; | ; ; | \| ஸா; | நீ ரீ | \| ஸ்நிதித பா; | \|\| |
| | நா | தன் | | நா | | மம் | |
| பதநிபதப—மாபமா, | | மாபம கரிக | | \| மபாம | பா,த*நித | \| தா; பா; | \|\| |
| | ந மச் | சி | | வா | ய | வே | |
| நீ; | நிததாபா | நீ; | நிததா பா | \| பமபா | பநிதபா | \| பா; பா; | \|\| |
| +ஏ | | | | | | | |
| மகமாகாரீ | பமபம | பநிதா | பா | \| பமபம | ஸ்நிதப பநிதப | \| கா மாபத பமகா ரீ | \|\| |
| ரிகமபத*நி — | தா,*நி | ஸா; | ; ; | \| ஸா; | நீரீ | \| ஸ்நிநித பா; | \|\| |
| | நா | தன் | | நா | | மம் | |
| மபத*நிஸா— | மபதா*,நி ஸா | | நிததப | \| பமபம | பாஸ்நி நிததப | \| கா மாபத பா,த பமகா ரிஸ | \|\| |
| | நமச்சி | | | வா | | ய வே | |

* இக்குறி சதுசுருதி தைவதத்தைக் குறிக்கும்

\+ இந்த இடத்தில் அகாரமாகப் பாடவேண்டும்

மங்கையர்க் கரசி வளவர்கோன் பாவை வரிவளைக் கைம்மடமானி
பங்கயச்செல்வி பாண்டிமா தேவிபணிசெய்து நாள்தொறும் பரவ
பொங்கழ லுருவன் பூதநா யகன்நால் வேதமும் பொருள்களும் அருளி
அங்கயற்கண்ணி தன்னொடும் அமர்ந்த ஆலவா யாவது மிதுவே.

**பண் : புறநீர்மை – தாளம்: ஆதி**

**திருஞானசம்பந்தர்** **பௌளி**

ஆரோ: ஸ ரி$^1$ க$^2$ ப த$^1$ த$^1$ ஸ்
அவ: ஸ் நி$^2$ த$^1$ ப க$^2$ ரி$^1$ ஸ

| | | | | |
|---|---|---|---|---|
| ; ,க பககரி காபா பா ; | ; கப | , த பா | பா ; தத பக | ‖ |
| மங் கை யர்க் க ர சி | வள | வர்கோன் | பா வை | |
| ; கபதப, கரீ கா நித தபபா | ; கப | , தஸ்ா | ஸ்ா ; நிதநித | ‖ |
| மங் கையர்க் க ர சி | வள | வர்கோன் | பா வை | |
| பா கப ,தபா பக தப கப கரி | ; ஸரி | ,கரீ | காபா பா; | ‖ |
| வரி வளைக் கை ம ட | மா | ணி | | |
| ” ” | ஸரிகா | ரிகபா | கபநித | ‖ |
| | மா | | ணி | |
| ; ,க ,பதா தாரீ ஸ்ா; | ; ,ஸ் | ,ரிஸ்ா | ஸ்ா; நித நித | ‖ |
| பங் கயச் செல் வி | பாண் | டிமா | தே வி | |
| பா,– ” ஸ்ா;ஸ்ரி ஸ்ரிக்ா | ; ,ஸ்ரி | க்ா க்ரிஸ்ா | நித நித | ‖ |
| செல்வி | பாண் | டிமா | தே வி | |
| பா–பத ,ஸ்ாஸ் ஸ்ா, த நிதபா | ; பப | க பதப | பகதப கபகரி | ‖ |
| பணி செய்து நா டொறும் | பர | வ | | |
| ஸா– | | | | |

*பின் இரண்டு அடிகளையும் இப்படியே பாடுக.*

அன்புறு சிந்தைய ராகி அடியவர்
நன்புறு நல்லூர்ப் பெருமணம் மேவிநின்று
இன்புறும் எந்தை இணையடி ஏத்துவார்
துன்புறு வாரல்லர் தொண்டுசெய் லாரே

**பண் : அந்தாளிக் குறிஞ்சி – தாளம் : ஆதி**

## திருஞானசம்பந்தர் சாம

ஆரோ: ஸ ரி$^{2}$ ம$^{1}$ ப த$^{2}$ ஸ்
அவ: ஸ் த$^{2}$ ப ம$^{1}$ க$^{2}$ ரி$^{2}$ ஸ

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1. | ; , ஸ , ரி மா | பா ; | த ஸ் தப | ; பதஸ்ா ஸ்ா | த ரி ஸ் ஸ் த த ப ப | |
| | அன் பு று | சிந் | தை யர் | ஆ கி | அ டி ய வர் | |
| 2. | மமக– | ” | | மா–பதஸ்த தா | பா ப பாதப மம | |
| | | ” | | ஆ கி | அ டி ய வர் | |
| 3. | க்ரீ– | ” | | மா–பதஸ்ா ஸ்ா | ரிஸ்ஸ்த த ப பம | |
| | | ” | | ஆ கி | அ டி ய வர் | |
| | மகரி–ரி பமகா | ரீரிம | கரிஸா | ;ரிம , பதா | ஸ்ததப மா மம | |
| | நன் புறு | நல் | லூர்ப் | பெரு மணம் | மே வி நின்று | |
| 1. | கரீ–த ,ததத | பமாத | ;ஸ்ா | ; தஸ் ,ரி ரீ | ரீ, ம் ம் ம் க் ரி | |
| | இன் புறும் | எந் | தை | இணையடி | ஏத்து வார் | |
| 2. | ; , ஸ் ,ஸ்ஸ்ஸ் | ததபம | தாஸ்ா | ” | ” | |
| | இன் புறும் | | எந்தை | | | |
| | ; , த ரிரிஸ்ா | ஸ்ஸ்தப | தாஸ்ா | ; , த ரிஸ் ஸ்ஸ் | ததபப மமகரி | |
| | துன் புறு | வா | ரல்லர் | தொண்டு செய் | வா ரே | |

கூற்றாயின வாறு விலக்ககிலீர்
கொடுமைபல செய்தன நானறியேன்
ஏற்றாயடிக் கேஇர வும்பகலும்
பிரியாது வணங்குவன் எப்பொழுதும்
தோற்றாதென் வயிற்றி னகம்படியே
குடரோடு துடக்கி முடக்கியிட
ஆற்றேனடி யேன்அதி கைக்கெடில
வீரட்டா னத்துறை யம்மானே.

**பண் : கொல்லி – தாளம் : ஆதி**

**திருநாவுக்கரசர்** **நவரோஜு**

ஆரோ: ப த² நி² ஸ ரி² க² ம¹ ப
அவ: ப ம¹ க² ரி² ஸ நி² த² ப

| | | | |
|---|---|---|---|
| ; ; கா   மமகரி   ரீகம | கரிஸா ; ஸா | ; தஸா   ஸஸா | ‖ |
| கூற்   றா   யின | வா   று | விலக்   ககி | |
| ஸநிநிததப—   ஸ த ஸா   ஸாஸா | ஸகரீ   ஸாஸா | ; ஸரீ கமா | ‖ |
| லீர்   கொடுமை ,, ல | செய் த ன | நா னறி | |
| நா ; ; | ஸரிகாமகரி ஸஸா | ; ஸரீ கமா | ‖ |
| யேன் | செய்   தன | நா னறி | |
| நா ; ; – கா   மாபா   ,மகா | மாபா   ,மகா | மாபா பாபம | ‖ |
| யேன்   ஏற்   றாய்   அடிக் | கே   இர | வும்   ப க | |
| ஸதபமகரி—ஸரி கா ரீ ரீ ரீ | ரீ;   ரிஸரீ | ;ரீ   கா   ப ம | ‖ |
| தும்   பிரி யா   து வ | ணங்   கு வன் | எப் பொ   ழு | |
| ஸமகரிஸா— | | | |
| தும் | | | |

*பின் இரண்டு அடிகளையும் இப்படியே பாடுக.*

மாதர்ப் பிறைக்கண்ணி யானை மலையான் மகளோடும் பாடிப்
போதொடு நீர்சுமந் தேத்திப் புகுவா ரவர்பின் புகுவேன்
யாதுஞ் சுவடுப டாமல் ஐயாறடைகின்ற போது
காதல் மடப்பிடி யோடுங் களிறு வருவன கண்டேன்
கண்டே னவர்திருப் பாதங் கண்டறியாதன கண்டேன்.

**பண் : காந்தாரம் – தாளம் : ரூபகம்**

## திருநாவுக்கரசர் — நவரோஜு

ஆரோ: ப த$^{2}$ நி$^{2}$ ஸ ரி$^{2}$ க$^{2}$ ம$^{1}$ ப
அவ: ப ம$^{1}$ க$^{2}$ ரி$^{2}$ ஸ நி$^{2}$ த$^{2}$ ப

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1. | ஸ தநீ | ஸாஸா | ஸா ஸா | ஸா, க | ரீ; | ஸநி தப |
| | மாதர் | பிறைக் | கண் ணி | யா | னை | |
| 2. | ” | | | ஸரிகரி | ஸரிகரி | ஸநி தப |
| | | | | யா | னை | |
| 3. | ” | | | பமகரி | ஸரிகம | பமகரி |
| | | | | யா | னை | |
| 4. | ரிகமக | கா ரீகம | கா, ம கரி ஸ | ஸரிகம | பா க ரிஸ | நிதப |
| | மாதர் | பிறைக் | கண்ணி | யா | னை | |
| | ஸ த நீ | ஸாஸா | ஸாஸா | கரிமா | கா; | ; ; |
| | ம லை யான் | ம க | ளொடும் | பா | டி | |

*கமபம | கமபா பமமக || ரிகமக | ரிகமா பமகரி
பமகரி ஸரிகம பமகரி ||
மா கா | மா பா ,ப பா || ரீ; | கமபா பமகரி |
போ தொ டும் நீர் சு மந் தேத் தி
ஸரி கரி | ரீ ரீ ரிஸ ரீ || கா மப | ரீ, ஸ ஸா; ||
புகு வா ரவர் பின் பு கு வேன்

**பின் அடிகளை இப்படியே பாடுக**

மக ரீ | ம க ரி ஸ ரீ ரீ || ம க ரி ஸ | ம க ரி ஸ ரீ ரீ ||
கண் டேன் அ வர்தி ருப் பா தம் க ண்ட றி யா த ன கண்டேன்
மா கா | மா பா பா பா || ரீ; | கமபமபமகா ||
கண்டேன் அ வர் தி ருப் பா தம்
ரீ ரீ | ரீ ரீ ரிஸ ரீ || காமப | க ரீஸ ; ; ||
கண்ட றியா த ன கண் டேன்

* இந்த இடத்தில் அகாரமாகப் பாட வேண்டும்.

மீளா அடிமை உமக்கே ஆளாய்ப் பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போல் உள்ளே கனன்று முகத்தான் மிகவாடி
ஆளா யிருக்கும் அடியார் தங்கள் அல்லல் சொன்னக்கால்
வாளாங் கிருப்பீர் திருவாரூரீர் வாழ்ந்து போதீரே

**பண் : செந்துருத்தி – தாளம் : திரிபுடை**

**சுந்தரர்** **மத்யமாவத்**

ஆரோ: ஸ ரி² ம¹ ப நி¹ ஸ்
அவ: ஸ் நி¹ ப ம¹ ரி² ஸ

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 1. | ரீரீரிஸ | ; ஸரிஸ | ரீ₃ | ,ரிமயா, | மா; | ப மரீ ரிஸ |
| | மீளா | அடி | மை | உமக்கே | ஆ | ளாய் |
| | ஸரிமாரி | ரிஸா | ஸ நிபாநிஸரிஸ | ரீ;; | ரீமபம | ரிமரிஸ |
| | பிறரை | வேண் | டா | தே | | |
| | பநி நிபா மமா | பபநி | ஸ்ா; | ரிஸ்ா, ஸ் | ஸ்நிபாபநி | ஸ்ா; |
| 2. | மூளாத் | தீ | போல் | உள்ளேக | னன் | று |
| | ” | ” | ” | ரிரீ;ரி | ஸ்ாரிம்ரி | ரிஸ்ஸா |
| | பமரிஸ்ரி | நிரஸ் நிபா | மாபநி | ஸ்ா; | பாநிஸ்நி | பமரிரி |
| | முகத்தான் | மிக | வா | டி | | |

*பின் இரண்டு அடிகளையும் இப்படியே பாடுக.*

தானெனை முன்படைத்தா னதறிந்து தன் பொன்னடிக்கே
நானெனை பாடலந்தோ நாயினேனைப் பொருட் படுத்து
வானெனை வந்தெதிர் கொள்ள மத்த யானை அருள் புரிந்து
ஊனுயிர் வேறுசெய்தான் நொடித்தான் மலை உத்தமனே

**பண் : பஞ்சமம் – தாளம் : ரூபகம்**

## சுந்தரர்

ஆரோ: ஸ ம$^1$ க$^1$ ம$^1$ ப த$^1$ நி$^1$ ஸ் ||
அவ: ஸ் நி$^1$ த$^1$ ப ம$^1$ க$^2$ ரி$^1$ ஸ ||

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| ஸா, ம | மாபா, | பபத | \|\| தநீத | \| நிதாப ; | பப | \|\| |
| தா னெ | னை முன் | படைத் | \|\| தான் | ,, | அத | \|\| |
| பதாநி | நிஸா | ரிஸா | \|\| நிஸ்ாநி | | | |
| றிந்து | தன் பொன் | னடிக் | கே | தநீத | நிதாப | |
| நீ, த | பா, த | நீ, ஸ் ஸ்ா | \|\| ஸ்ாகரிரிநி | \| ஸ்ா; | பப | |
| நா னெ | ன | பாடலந் | \|\| தோ | ..... | நாயி | |
| பா பா | பமமா | ,மமா | \|\| பதநீஸ்நி | \| தநீத | நிதபா | |
| னேனைப் | பொருட் | படுத் | து | | | |

*பின் இரண்டு அடிகளையும் இப்படியே பாடுக.*

